காசினி எல்லாம் காப்பாய் போற்றி
காசி ராமேசம் ஆவாய் போற்றி
ஆசிகள் கூறி அருள்வாய் போற்றி
அபிஷே கத்தில் மகிழ்வாய் போற்றி
பாசி மனத்தின் தெளிவே போற்றி
பக்தர் உளத்தின் கனிவே போற்றி
ஊசி முனைபோல் அறிவே போற்றி
உளதாய் இலதாய் ஆனாய் போற்றி 104

கின்னரர் இயக்கர் கந்தர்வர் எல்லாம்
கீர்த்தி பாடும் கிளியே போற்றி
பன்மலர் தூவி வழிபடு வோர்க்குப்
பதமலர் அருளும் பாவாய் போற்றி
தன்னல மின்றிப் பணிசெய் வோர்க்குத்
தலைமை தந்தருள் தாயே போற்றி
சொன்னலத் தாலே துதிசெய் வோர்க்குச்
சுகமருள் கொப்புடை அம்மையே போற்றி 112



அருள் மணக்கும் கொப்புடையாள் பொருள் மணக்கும்
காரை நகர் அமைந்த தேவி,
குரு மணக்கும் சீமையெல்லாம் குலம் மணக்கும்
சீலங்கள் கொழித்த தாயே!
திரு மணக்கும் இல்லங்கள் தெரு மணக்கும்
தொழில் யாவும் திளைக்கும் அம்மா!
தரு மணக்க வீடெல்லாம் தமிழ் மணக்கும்
நலமெல்லாம் தருவாய் அம்மா!

பொற்கிழிக் கவிஞர் காசி ஸ்ரீ அரு. சோமசுந்தரன்.



## அபிராமி அந்தாதி

உதிக்கின்ற செங்கதிர், உச்சித்திலகம், உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடிக் குங்கும தோயம் என்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே!

நாயகி, நான்முகி, நாராயணி! கைநளினபஞ்ச
சாயகி, சாம்பவி, சங்கரி, சாமளை, சாதிநச்சு
வாய்அகி மாலினி வாராகி சூலினி மாதங்கி என்(று)
ஆயகியாதி உடையாள் சரணம் அரண் நமக்கே!



## அபிராமியம்மைப் பதிகம்

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணியி லாத உடலும்

சலியாத மனமும்அன் பகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள்வா ராத கொடையும்

தொலையாத நிதியமும் கோணாத கோலும் ஒரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உத விப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்;

அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

காரளக பந்தியும் பந்தியின் அலங்கலும்
கரிய புருவச் சிலைகளும்
கர்ணகுண் டலமுமதி முகமண் டலம்நுதற்
கஸ்தூரிப் பொட்டும் இட்டுக்

கூரணிந் திடுவிழியும் அமுதமொழி யும்சிறிய
கொவ்வையின் கனி யதரமும்
குமிழனைய நாசியும் குந்தநிகர் தந்தமும்
கோடுசோ டான களமும்

வாரணிந் திருமாந்த வனமுலையும் மேகலையும்
மணிநூ புரப்பா தமும்
வந்தெனது முன்னின்று மந்தகா சமுமாக
வல்வினையை மாற்று வாயே;

ஆரமணி வானிலுறை தாரகைகள் போலநிறை
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

மகரவார் குழல்மேல் அடர்ந்துகுமிழ் மீதினில்
மறைந்து வாளைத் துறந்து
மைக்கயலை வேண்டிநின் செங்கமல விழியருள்
வரம்பெற்ற பேர்க ளன்றோ?

செகமுழுதும் ஒற்றைத் தனிக்குடை கவித்துமேற்
சிங்கா தனத்தி லுற்றச்
செங்கோலும் மநுநீதி முறைமையும் பெற்றுமிகு
திகிரியுல காண்டு பின்பு

புகர்முகத்(து) ஐராவதப் பாகராகி நிறை
புத் தேளிர் வந்து போற்றப்
போகதே வேந்திரன் எனப்புகழ் விண்ணில்
புலோமிசை யொடுஞ்சு கிப்பர்;

அகரமுத லாகிவளர் ஆனந்த ரூபியே!
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

மறிகடல்கள் ஏழையும் திகிரிஇரு நான்கையும்
மாதிரக் கரியெட் டையும்
மாநாகம் ஆனதையும் மாமேரு என்பதையும்
மாகூர்மம் ஆனதையு மோர்

பொறியரவு தாங்கிவரு புவனமீ ரேழையும்
புத்தேளிர் கூட்டத்தையும்
பூமகளையும் திகிரி மாயவனையும் அரையில்
புலியாடை உடையா னையும்

முறை முறைக ளாயீன்ற முதியவர்களாய்ப் பழைமை
முறைகள் தெரியாத நின்னை
மூவுலகி லுள்ளவர்கள்வாலையென்(று) அறியாமல்
மொழிகின்ற தேது சொல்வாய்;

அறிவுநிறை விழுமியர்தம் ஆநந்த வாரியே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

வாடாமல் உயிரெனும் பயிர் தழைத் (து) ஓங்கிவர
அருள் மழை பொழிந்தும் இன்ப
வாரிதிலே நின்ன தன்பெனும் சிறகால்
வருந்தாமலே அணைத்துக்

கோடாமல் வளர்சிற் றெறும்பு முதல் குஞ்சரக்
கூட்டமுதலானசீவ
கோடிகள் தமக்குப் புசிக்கும் புசிப்பினைக்
குறையாமலே கொடுத்து

நீடாழி உலகங்கள் யாவையும் நேயமாய்
நின் உதர பந்தி பூக்கும்
நினமலி! அகிலங்களுக்(கு) அன்னை என்றோதும்
நீலியென் (று) ஓது வாரோ?

ஆடாய நான் மறையின் வேள்வியால் ஓங்குபுகழ்
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி அபிராமியே!

பல்குஞ் சரந்தொட் டெறும்புகடை யானதொரு
பல்லுயிர்க் குங்கல் லிடைப்
பட்டதே ரைக்கும் அன் றுற்பவித் திடுகருப்
பையுறு சீவனுக்கும்

மல்குஞ் சராசரப் பொருளுக்ம் இமையாத
வானவர் குழாத்தினுக்கும்
மற்றுமொரு மூவர்க்கும் யாவர்க்கும் அவரவர்
மனச்சலிப் பில்லா மலே

நல்குந் தொழிற்பெருமை உண்டா யிருந்துமிகு
நவநிதி உனக்கி ருந்தும்
நானொருவன் வறுமையில் சிறியனா னால் அந்
நகைப்பு உனக்கே அல்லவோ!

அல்கலந் தும்பர்நா டளவெடுக் குஞ்சோலை
ஆதிகடவூரின் வாழ்பவ !
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !
அருள்வாமி ! அபிராமியே !

நீடுல கங்களுக்(கு) ஆதாரமாய் நின்று
நித்தமாய் முத்தி வடிவாய்
நியமமுடன் முப்பத்திரண்டறம் வளர்கின்ற
நீ மனைவியாய் இருந்தும்

வீடுவீடுகள் தோறும் ஓடிப்புகுந்து கால்
வேசற் (று) இலச்சையும் போய்
வெண்துகில் அரைக்கணிய விதியற்று நிர்வாண
வேடமுங் கொண்டு ஃகைக்கோர்

ஓடேந்தி நாடெங்கும் உள்ளந் தளர்ந்து நின்(று)
உன்மத்தனாகி அம்மா
உன் கணவன் எங்கெங்கும் ஐயம்புகுந்தேங்கி
உழ்ல்கின்றது ஏதுசொல்வாய்;

ஆடுகொடி மாடமிசை மாதர்விளை யாடிவரும்
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி
அருள்வாமி! அபிராமியே!

ஞானந் தழைத்துன் சொருபத்தை அறிகின்ற
நல்லோர் இடத்தி னிற்போய்
நடுவினி லிருந்துவந் தடிமையும் பூண்டவர்
நவிற்றும் உபதேச முட்கொண்(டு)

ஈனந் தணைத்தள்ளி எனதுநான் எனுமானம்
இல்லாம லேது ரத்தி
இந்திரிய வாயில்களை இறுகப்பு தைத்துநெஞ்(சு)
இருளற விளக்கேற்றியே

ஆனந்த மானவிழி அன்னமே! உன்னைஎன்
அகத்தா மரைப்போ திலே
வைத்துவே றேகவலை யற்றுமே லுற்றபர
வசமாகி அழியாத தோர்

ஆனந்த வாரிதியில் ஆழ்கின்றது என்றுகாண்?
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

சலதியுல கத்திற் சராசரங் களையீன்ற
தாயகினுல் எனக்குத்
தாயல்லவோ? யான்உன் மைந்தனன்றோ? எனது
சஞ்சலம் தீர்த்து நின்றன்

முலை சுரந்தொழுகுபா லூட்டிஎன் முகத்தை உன்
முன் தானையால் துடைத்து
மொழி கின்ற மழலைக குகந்து றொண்டிள நிலா
முறுவல்இன் புற்றருகில் யான்

குலவி விளையாடல் கொண்ட ருள்மழை பொழிந்(து) அங்கை
கொத்திவா என்(று) அழைத்துக்
குஞ்சரமுகன் கந்தனுக்(கு) இளையன் என்றெனைக்
கூறினுல் ஈனம் உண்டோ?

அலை கடலிலே தோன்றும் ஆராத அமுதமே!
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

# திருமகள் பதிகம்

அருட்கவியரசர் கு. செ. இராமசாமி, M. A., சிவகங்கை

நீலநெடுங்கிரி மேலொரு குங்கும
நித்திலப் பொன்னருவி
போலத்திருநெடு மாலவன் நெஞ்சில்
பொருந்திக் கலந்தவளே!
சூலம், குலிசிமும் நேமியும் வந்து
துதிக்க மகிழ்ந்தவளே!
காலம் கனிந்தது பாலன்எனக்கும்கண்
காட்டும் திருமகளே (1)

மக்கள் முகம்கண்ட பின்னும் கணவனின்
மையல் உனக்கெதற்கு?
பொக்கெனத் தந்து புதல்வன் துயரத்தைப்
போக்கஉண் டோவழக்கு?
இக்கண மேஐயன் மேல்வைத்த பார்வையை
ஏழையென் மேல்திருப்பு!
சிக்கெனப் பற்றினன் துக்கம் களைந்தருள்
செய்க திருமகளே! (2)

ஈசன் வறுமையை ஏந்திய ஓட்டினை
ஏற்றனை நீயல்லவோ?
தாசன் கவிதைக்குத் தங்கக் கனிதந்து
தாங்கினை! தாயல்லவோ?
நீசன் எனினும்என் தோஷம் மறந்தருள்,
நின்னன்புச் சேயல்லவோ?
நேசத் திருப்பதி வாசன் புயங்களில்
நிற்கும் திருமகளே! (3)

பாற்கடல் தந்த பசுவதி! மாதவன்
    பத்தினி! வேதவல்லி,
நாற்கரம், தாமரை மேல்தங்கு பூம்பதம்;
    ஞால முழுமுதல்வி!
காற்சதங் கைகொஞ்சக் கண்மணி, என்முன்
    கனிந்து எழுந்தருளே!
மேற்பொருள் ஏதும் இலாத விழுப்பொருள்!
    வெற்றித் திருமகளே! (4)

சங்கொடு சக்கரம் தாங்கும் கரங்களில்
    தாரணி சுற்றிவரும்!
அங்கை அபயம் வரம்தரும் நின்பதம்
    ஆனந்த சித்திதரும்!
சங்கரன், கேசவன், பங்கயன் கூடித்
    தலைவணங் கும்புகலே!
மங்கலை, உன்னை வணங்கித் துதித்தனன்;
    வாழி, திருமகளே! (5)

கண்களும் தாமரை! கைகளும் தாமரை!
    கால்கள்செந் தாமரையே!
வண்ண முகம், இரு கன்னம், கழுத்தொடு
    மார்பும்செந் தாமரையே!
எண்ணும் பதங்கள், இருக்கை, மலர்க்கை
    எடுத்ததும் தாமரையே:
கண்ணியும் மாலையும் தாமரை! தாமரை!
    காதல் திருமகளே! (6)

பாபத்தின் வேரைப் பறித்திடும் அம்பிகை!
    பார்க்கவன் கன்னிகையே!
தீபத்தி லேமுகம் காட்டும் மகாசிவை!
    தேவி! தயாபரையே!
சாபம், நவக்ரக தோஷம் விலக்கித்
    தனயன் எனக்கருளே!
தூபத்தில் செல்வம் சுரந்தருள் வாய், அருட்
    சோதி திருமகளே! (7)

எட்டு வகைச் செல்வம் ஏறி வளர்ந்திட
என்னம்மை நீ வருக!
சுட்டும் இடங்களில் சொர்ணம் விளைந்திடத்
தோகை அருள் புரிக!
இட்டது சட்டம் இசைந்தது வேதம் என்(று)
என்னுள் கலந்தருள்க!
கட்டெழில் மேனி என் கண்ணில் கருத்திடைக்
காட்டு திருமகளே! (8)

கோடி வளங்கள் குவித்துப் புவியில்
குபேரன் எனப் புரிவாய்!
நாடும் நலன்கள் கைகூட, எனை—நர
நாரணன் ஆக்கிடுவாய்!
மாடு, மனை, மக்கள் ஆயுள், புகழ் தந்து
வாழ்த்தும் அலைமகளே.
பாடும் கவிமலர், ஆடி உவந்தருள்
பாசத் திருமகளே! (9)

சுக்கிர வாரம் சுடர்மணித் தீபம்
துலங்க வரும் பொருளே!
பக்குவ ஞானம், பதம் சுகக்ஷேமம் சௌ
பாக்கியம் நீ அருளே!
மிக்க பெரும் புகழ் மெல்லியலே! திரி
விக்ரமன் காதலியே!
செக்க சிவந்த மலர்மிசை ஏறிய
செல்வத் திருமகளே! (10)



# அருள் தரு ஐந்து அம்மன் மாலை

கவியரசர் கண்ணதாசன்

## விசாலாட்சி அம்மன்

காலமகள் விளையாடும் நீலமணிக் கடல்மீது
கங்கைநதி சேரும் போது
கண்ணெதிரில் உன்பிள்ளை உன்னோடு சேராமல்
கண்ணீரில் நிற்ப தேது
ஆலமர நிழலாக ஆதரவு தந்தாலும்
அல்லலுறும் எனது வாழ்வு
அம்மாஉன் திருவடியை அடைந்தாலே அமைதிவரும்
அடுத்ததொரு பிறவி ஏது
மாலவனின் கங்கைக்கு வானகமும் மண்ணகமும்
மலர்பூக்கும் சோலை யலவோ
வரவேண்டும் உனதுமடல் தரவேண்டும்உன் கருணை
வானகமிலாத நில வோ
கோலமிகு விசுவேசன் காசிநகர் தன்னிலே
கொண்டாடும் அன்பு மயிலே
குடையளவு நான்காணக் கொடையளந்து கொண்டுவா
கோதைவிசா லாட்சி உமையே
உள்ளநாள் வரையிலே நன்மையும் தீமையும்
ஒன்றென்றே எண்ணவரம் தா
உறவோடு பகையையும் இரவோடு பகலையும்
ஒருமித்துப் பார்க்கவரம் தா
வெள்ளம்போல் செல்வமும் வறுமையும் சமமென்று
விளையாடும் வாழ்க்கைவரம் தா
விதியென்றும் வலியதே மதி என்றும் சிறியதே
வினைதீர்த்து நல்லதுணை தா
பள்ளம்போல் இதழையும் மலைபோல் புகழையும்
பந்தாடும் வீரநிலை தா
அள்ளியிடும் கையினுல் அர்த்தசா மத்திலும்
அருள்செய்யும் அன்பு மயிலே
அறமுடைய வணிகர்குலம் சிலைவைத்த தேவியே
அழகுவிசா லாட்சி உமையே

## மீனாட்சி அம்மன்

கருவிலே திருவுடைய நல்லறி வாளர்தமது
கனிவான நட்பு வேண்டும்
காசுபண ஆசைகளில் வேசையரைப் போலாடிக்
கறவாத புத்தி வேண்டும்
அருளுடைய பெரியவர்கள் ஆசிவேண்டும் நெஞ்சில்
அகலாத அன்பு வேண்டும்
ஆதரவில் லாதவரில் நல்லவரைப் பார்த்துநான்
ஆதார மாக வேண்டும்
மருளுடைய மான்போலும் மங்கைஒரு தேவிஎன்
மனையாட்டி யாக வேண்டும்
மானமெனும் ஒன்றிலே மாருத குறிவைத்து
வாழ்க்கையைக் காக்க வேண்டும்
இருளகல ஒளிவீசும் இறைவனது தேவியே
இவைசேர வேண்டும் எனையே
இனியதொரு மதுரைநகர் அரசுவீற் றிருக்கின்ற
இளையமீ னாட்சி உமையே!
ஆடுகிற பம்பரம் ஆடல் நிறுத்தாமல்
ஆடுவதும் உன் செய்கையே
அஞ்சுகிற நெஞ்சமும் ஆர்ப்பரித் தேநின்று
அரசோச்சல் உன்செய் கையே
பாடுகிற பாவலன் பல்லாயிரம் பாடல்
பாடுவதும் உன்செய் கையே
பல்லக்கில் ஏறுவதும் செல்வாக்கு மீறுவதும்
பரமாத்ம நின்செய் கையே
கூடுகிற கூட்டத்தில் மாலைமரி யாதைகள்
கூடுவதும் உன்செய் கையே
குற்றங் களைநீக்கிச் சுற்றங்கள் ஒன்றாகிக்
கொஞ்சுவதும் உன்செய் கையே
கோடுநதி மாகடலில் கொள்கைகளைக் காட்டிடும்
கோமகனின் அன்பு மயிலே
கொற்றவர்கள் ஆண்டதிருக் கூடல்நகர் ராணியே
கோதைமீ னாட்சி உமையே!

## காமாட்சி அம்மன்

மழைக்காலம் குளிர்காலம் வருங்காலம் நிகழ்காலம்
வரிபோட் டனுப்பும் அழகே
மதிஎன்றும் நிதியென்றும் சதியென்று பதிஎன்றும்
மடல்தந்து கூட்டும் மலரே
அழைத்தாலும் வெறுத்தாலும் அடித்தாலும் அணைத்தாலும்
அன்றுடம் உதவும் கனியே
அலைந்தாலும் தவித்தாலும் அமர்ந்தாலும் படுத்தாலும்
அருகாக நிற்கும் துணையே
அழக்கூட வழியற்ற பிள்ளைக்குப் பாலூட்டி
அறந்தந்த தெய்வ நிலவே
அடியார்க்கும் அடியாரை சிறியார்க்கும் சிறியாரை
அணைக்கின்ற அன்பு நிலையே
இழைகின்ற உள்ளத்தை எனக்கும் அளிக்கின்ற
ஏகாம் பரன் தேவியே
எழில்பொழியும் காஞ்சிநகர் அரசுபுரி ராணியே
எழில்கா மாட்சி உமையே!
ஊமைக் குழந்தைக்கு நின்மகன் வேல்கொண்டு
ஓமென்று எழுத விலையோ
உழல்கின்ற பாண்டவர் பாரதப் போருக்கு
உன் அண்ணன் உதவ விலையோ
காமனைக் கண்ணாலும் திரிபுரம் சிரிப்பாலும்
கணவனே எரிக்க விலையோ
காட்டிலும் மேட்டிலும் கரையிலும் நின்பிள்ளை
கவலைகள் தீர்க்க விலையோ
சாமத்தில் உன்நாதன் சிவனுக்கு எனைப்பற்றிச்
சரியாகச் சொல்ல விலையோ
சரிகமவென் றேபாடிப் பார்க்கிறேன் நீஇன்னும்
சங்கீத மாக விலையோ
எமன் நெருங்காமல் என்வாழ்வு காக்கின்ற
ஏகாம் பரன் தேவியே
எழில்பொழியும் காஞ்சிநகர் அரசுபுரி ராணியே
ஏதில்கா மாட்சி உமையே!

# சிவகாமி அம்மன்

பட்டாடை கட்டிஉனைப் பார்க்கின்ற வேளையில்
பத்தினியை நான்பார்க் கிறேன்
பல்லக்கில் ஏறிநீ ஊர்முழுவதும் செல்கையில்
பைரவியை நான்பார்க் கிறேன்
எட்டாத தேர்நடுவில் ஏற்றிஉனை வைக்கையில்
இன்தமிழை நான்காண் கிறேன்
எங்கெங்கு போயினும் எதனைநான் காண்கினும்
அங்கெலாம் உனைக்காண் கிறேன்
தொட்டார்க்குத் தாயாகத் தொடர்வார்க்குச் சேயாக
தோகைநீ ஆன தென்ன
சோழகுலம் பலகாலம் ஆளும்வரை நீஅங்கு
துணையாய் இருந்த தென்ன
கொட்டாத மேளங்கள் கொட்டுகிற கூத்தாடி
கோலநட ராசன் துணையே
கொடிவளரும் தில்லைநகர் நடுவிலொரு திருக்கோவில்
கொண்டசிவ காமி உமையே!
நீராடி நெய்பூசி புத்தாடை கள்கட்டி
நேர்வந்த கன்னிய ரெல்லாம்
நிழல்கண்டு துணைகண்டு மகவோடு பொருள்கண்டு
நிலையான வாழ்வு மடைவார்
போராடிப் போராடிப் பலதுன்பம் பெற்றோர்கள்
புகழார்ந்த அமைதிய டைவார்
புண்ணாகி மரணத்தைக் கண்ணாக நினைப்போர்கள்
புதுவாழ்வு தாமும டைவார்
வாராத படியேறி வந்தோர்கள் எல்லோரும்
வளமான செல்வம டைவார்
வயதான முதியோருஞ் செயதேவி உனைக்காண
மாறாத இளமைய டைவார்
ஏராளர் குரலோடு எழில்நடன மிடுகின்ற
இனியநட ராசன் துணையே!
இதமுடைய பொன்னிநதி கரைபுரளும் தில்லைநகர்
இன்பசிவ காமி உமையே!

# அபிராமி அம்மன்

திருமகளும் கலைமகளும் அலைமகளும் உள்ள இடம்
திருக்கடவூர் சங்க மலவோ
சிவபெருமான் திருமாலும் பிரம்மாவும் வந்த இடம்
திருக்கோவில் மேடை யலவோ
பருவமுயர் பெண்களோடு பலபெற்ற தாய்மாரும்
பார்ப்பது உன் வடிவ மலவோ
பாவிகளும் வந்தவுடன் புண்ணியர்க ளாகுமிடம்
பாவைஉன் சோலை யலவோ
ஒருபிறவி மறுபிறவி ஏழுபிறவி வந்தாலும்
உன்னையே பணிய அருள்வாய்
உலகமெனை அறியாத புல்லாய்க் கிடந்தாலும்
உன்முனம் முளைக்க அருள்வாய்
அருள்வளர மருள் அகல ஆதிக்கம் செய்கின்ற
அமிர்த கடேசன் தன் துணையே
அழகுதிருக் கடவூரில் பழகுதமிழ் உரையாடும்
அன்புமயில் அபிரா மியே

காவிரிப்பூம் பட்டினத்து வாணிகரைத் தாலாட்டிக்
காத்ததுஉன் கண்க ளிலையோ
கள்ளிருக்கும் சோலைகளின் உள்ளிருந்து குலமாதர்
காவல்தரும் தெய்வ மிலையோ
கோவலனைக் கூடலிலே கொன்றவுடன் கண்ணகியின்
கூட்டினுள் நீசெல்ல விலையோ
கொற்றவரைப் பத்தினியைப் பார்ப்பனரை விட்டுவிட்டு
மற்றவரைக் கொல்ல விலையோ
பாவலர்க்கு நல்லதமிழ் படியளந்து தந்துவிட்டு
பாடல் நீபெற்ற திலையோ
பாலோடு சந்தனமும் நின் முகத்தைப் பார்த்தவுடன்
பாவை நீகாவ லிலையோ
பூவிரிய வண்டுவர நின் முகத்தைப் பார்த்தவுடன்
பூசைசெய வைத்த மயிலே
போதவிழும் திருக்கடவூர் தேவர்நிக ராகவந்த
பொன்மேனி அபிரா மியே

  

# இரு கண்கள்

**PR. C.** ராமசாமி அம்பலம், செஞ்சை

காரைக்குடி நகரத்திற்கே இதயமாக, இன்பஊற்ருக, அன்புள்ளமாக ஆட்சிபுரிபவள் அருள் மிகு கொப்புடைய நாயகி ஆகும். கேட்டவருக்கு கேட்ட வரமெல்லாம் தரும் வல்லமை பெற்றவள் கொப்புடையாள்.

பல நூற்ருண்டுகளாக அவளை வழிபடும் நாட்டார் பெருமக்களுக்கும் நகரத்தார் பெருமக்களுக்கும் நலன்கள் விளைந்து ஓங்கிவருவது கண் கூடு. இரண்டு சமூகத்தாரும் இணைந்து வழிபடுவதிலும், விழா எடுப்பதிலும் நிகரற்றவர்களாகத் திகழ்ந்து வருகிருர்கள். நகரத்தார், நாட்டார் செய்துவரும் பலதர்மங்களும், இறைவன் திருப்பணிகளும் போற்றற்குரிய வரலாற்றுச் செயல்களாகும்.

கொப்புடையாளுக்குத் திருவிழா எடுப்பதில் இருமரபினரும் இணைந்து செயல்படுகிருர்கள். செவ்வாய் பெருவிழாவில் தேரில் அம்மன் காட்டம்மன் கோவிலுக்குச் சென்று மறுநாள் திரும்பி சேர்க்கை சேரும்வரையில் இருசமூகத்தாரும் தங்களின் மேலான ஒத்துழைப்பை, பெரும்பணியினை செய்து திருவிழா சிறப்படையச் செய்கிருர்கள். இப்பணி தொன்றுதொட்டு வளர்ந்துவருகிறது. நாட்டார் சமூகத்துப் பெண்கள், ‘‘ மதுக் குடம் ’’ எடுப்பதிலும் நகரத்தார் சமூகத்துப் பெண்கள் ‘‘ மாவிளக்கு ’’ ஏற்றி வழிபடுவதில் ஈடு இணையில்லாதவர்களாக திகழ்ந்து வருகிருர்கள். செவ்வாய் திருநாள் காப்புக் கட்டிவிட்டால் வெளியூர் செல்லாதிருப்பதும், வெளியூரில் இருப்பவர்கள்கூட ஊருக்கு வந்துவிடுவதும் பரம்பரை பழக்கமாகும். அத்தனை சிறப்புமிகு செவ்வாய் திருநாளை பக்தி சிரத்தையுடன் கொண்டாடி வருகிருர்கள்.

காரைக்குடி நாயகி கொப்புடையாள் **நாட்டார், நகரத்தார்** இருமரபினரையும் தன்னுடைய இருகண்களாகவே கொண்டு அருள் பொழிந்து வருகின்ருள். இரண்டு கண்களிலும் ஒரே காட்சிதான் தெரியும். அதேபோல இரு மரபினராகிய இருகண்களும் அன்னையின் **அருள்பணி** என்ற ஒரே காட்சியை இணைந்து காணவும் பணிபுரியவும் வேண்டுகிறேன்.

வாழ்க இறைப்பணி ! வளர்க அன்புள்ளங்கள் !!

***

## கல்லுக்கட்டி

நங்கை ஒருத்தி நாள்தோறும் வந்துநின்னு
அன்னைக்குப் பூப்போட்டு அழகு பாப்பாளாம் !
உடலைத் திரியாக்கி உள்ளத்தை நெய்யாக்கி
விளக்கேத்தி வைப்பாளாம் வணங்கி நிற்பாளாம் !

மங்கை கனவில் வந்தாளாம் ‘‘ கொப்புடையாள் ’’
குளம்ஒன்னு வெட்டச்சொல்லி குறிப்புச் சொன்னுளாம் !
கல்லெடுத்து அந்தக்குளம் கட்டிவச்ச காரணத்தால்
**கல்லுக்கட்டி** ஆனதுங்க-இப்பதெப்பம் அதில்போகுதுங்க

கவிஞர் ரவிபாரதி



# எட்டு இலக்குமி வழிபாடு

டாக்டர் அர. சிங்காரவடிவேலன்

### தனலெட்சுமி

எட்டு வகையாய் இலங்கும் திருமகளே!
கொட்டும் மழைபோல் கொடுப்பவளே! — இட்டமலர்
அத்தணையும் பொன்னுகி அன்பு மணையோங்கப்
பக்தர்களை ஏறிட்டுப் பார்.

### கஜலெட்சுமி

ஆனை இருபுறமும் அள்ளிச்சொரி புனல்போல்
தானம் கொடுக்கும் தவப்பயனே — ஈனமெனும்
இந்தப் பிறவி இனிமேலே போயொழியத்
துந்திக்கை தாராய்! துணை

### விஜயலெட்சுமி

வெற்றித் திருவே! விளக்கேற்றிக் கும்பிடுவார்
கற்றுச் சிறந்திடவும் கல்வியுடன் மற்றவையும்
உற்றுச் சிறந்திடவும் உண்மை நிமிர்ந்திடவும்
ஏற்றிடுக எங்கள் இடர்.

### சந்தான லெட்சுமி

கள்ளூறும் வாயால் கனிமழலை பேசுகிற
பிள்ளை வரமருளும் பேரன்பே! — எல்லாரும்
நல்லவரைப் பெற்றிடவும் நாடு சிறந்திடவும்
வல்லவளே! ஈவாய் வரம்.

## வீரலெட்சுமி

பஞ்சான கையால் படைக்கருவி ஏந்தாமல்
எஞ்ஞான்றும் வெல்லும் இயல்புடையாய் அஞ்சாமல்
நேர்மை படையால் நெருங்கும் பகைவெல்லும்
கூர்மை எமக்கும் கொடு.

## ஆதிலெட்சுமி

சோதி மலரே! சுடரின் சுடராகும்
ஆதிப் பொருளாய் அமைந்தவளே! — நீதியெனும்
மூலத்தின்மேலே முளைக்கின்ற கோபுரமாய்
ஞாலத்தை எந்நாளும் தாங்கு

## தானியலெட்சுமி

புல்லை விதையாக்கிப் பூமியிலே நட்டாலும்
நெல்லாக மாற்றும் நிறைவுடையாய்! — கல்லெல்லாம்
ஆக்கிப் புசிக்கும் அருமை உணவாக்க
வாய்க்குத் தருவாய் வரம்.

## ஐசுவரியலெட்சுமி

வீடும் விளைநிலமும் வேண்டும் நலம்பிறவும்
தேடிக் கொடுக்கும் திருமகளே! — ஓடும்
புனல்கூட மீன்னும் பொருளாக மாறத்
தினமும் விளக்கில் திகழ்



# கோயிலும் குடமுழுக்கும்

*பேராசிரியர் : த அகரமுதல்வன் எம். ஏ., எம். ஃபில்., (பூம்புகார்க்கல்லூரி)*

*மேலையூர் - 609 107.*

## முன்னுரை :

'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது பழமொழி. 'திருக்கோயிலில்லாத திருவிலூரைக் காடு' என்று சாடுகிறார் திருநாவுக்கரசர். புதிய ஊரொன்றை நிறுவமுனைவாரும் கோயிலை நடுவணதாகக் கட்டிய பின்னரே. ஊரை அமைப்பது தொன்றுதொட்டு இந்தியாவில் இருந்து வரும் மரபு. இதனை உறரப்பா, மொகஞ்ச-தாரோ அகழ்வாய்வம் காட்டுகிறது. வேத காலத்தில் வேள்விகளுக்கு இருந்த சிறப்பினைப் பின்னர் கோயில்கள் பெறலாயின. 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்ற கொள்கையும் வளரலாயிற்று.

## திருக்கோயிலின் தேவை :

இறைவன் எங்கும் இருக்கிறான். 'அவன் தூணிலுமிருப்பான்; துரும்பிலுமிருப்பான்' என்பது யாவரு மறிந்த பழமொழி. எனவே, எங்கும் நிறைந்துள்ள இறைவனை அங்கங்கே வழிபட இயலாதா? அவனுக்குக் கோயில் என்றொரு தனி இடந்தேவைதானா? என்று கேட்பாரும் உளர்.

பூமியின் அடிப்பாக மெங்கும் நீர் உளதெனினும், அந்நீரை மேலே கொணர கிணறு அல்லது, குழாய் போன்ற ஒரு சாதனம் தேவைப்படுகிறது. வானொலி நிலையத்தில் ஒலிபரப்பாகி, வானில் நிறைந்திருக்கும் ஒலியை ஈர்த்துத்தருவதற்கு ஒரு வானொலிப்பெட்டி தேவைப்படுகிறது. அதுபோல் எங்கும் பரந்திருக்கும் இறையருளை ஈர்த்துத்தருவதற்கு அமைந்த சாதனங்களே கோயிலும், அதனுள்ளிருக்கும் குறிகளும். 'பசுவின் உடலெங்கும் பாலிருப்பினும் மடிக்காம்பின் வழியேதான் பாலைப் பெறமுடியும். அவ்வாரே எங்குமிருக்கும் இறையருளைக் கோயிலின் மூலமே பெறமுடியும் என்கிறது சிவஞானசித்தியார். 'விறகில் தீபோலும், பாலில் நெய்போலும்' மறைய நின்றுளான் இறைவன். அஃதாவது அப்பிரகாசமாய் உள்ளான். அவன் பிரகாசமாய் வெளிப்பட்டுத் தோன்றுமிடங்கள் இரண்டு. ஒன்று அடியார் திருவேடம்; இன்னொன்று திருக்கோயில் என்று சிவஞானபோதம் கூறுகிறது:

> "மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
> ஆலயந் தானும் அரனெனத் தொழுமே."

ஆதலின், உள்ளக் கிழியில் உருவெழுதிக் கொண்ட ஞானியரைத் தவிர, ஏனைய அனைவருக்கும் வழிபாட்டிற்குத் திருக்கோயில் தேவைப்படுகிறது.

## திருக்கோயில்களின் தோற்றமும் வளர்ச்சியும் :

தமிழகத்தைப் பொறுத்தவரையில் கோயில்கள் சங்ககாலந்தொட்டே இருந்து வந்துள்ளன. சங்கத் தமிழர், மலை, காடு, நீர்நிலை போன்ற இயற்கையில் கடவுளுறைவதாக எண்ணி வழிபட்டதோடு, கல்லிலும், மரத்திலும் தெய்வமேற்றி வழிபட்டுள்ளனர். பரதவர் கடற்றுரை மணற் பரப்பில் சினைச்சுறாவின் கோடு நட்டு அதிலும் தெய்வமேற்றி வழிபட்டுள்ளனர் என்பதை,

"சினைச் சுறவின் கோடு நட்டு
மனைச் சேர்த்திய வல்லணங்கினால்"

என்னும் பட்டினப்பாலை வரிகள் தெரிவிக்கின்றன.

முருகன் எங்கெல்லாம் உறைவான் என்பதைத் திருமுருகாற்றுப்படை,

"வேலன் தைஇய வெறியயர் களனும்,
காடும், காவும், களின்பெறு துருத்தியும்,
யாறுங், குளனும், வேறுபல் வைப்பும்,
சதுக்கமும், சந்தியும் புதுப்பூங் கடம்பும்,
மன்றமும், பொதியிலும், கந்துடை நிலையிலும் ......"

என்று பாடுகிறது. தமிழர், வெறியாடு களம், காடு, பூங்கா, ஆற்றிடைக்குறை, ஆறு, குளம், பிற வைப்புக்கள், சதுக்கம், சந்தி, கடம்பு, மன்றம், பொதி ஆகிய இடங்களில் முருகனை வழிபட்டதோடு, கந்துடை நிலையிலும் வழிபட்டுள்ளனர். கந்துடை நிலை என்பது, தெய்வம் பற்றி நிற்பதாகக் கருதி அவர்கள் வழிபட்ட கற்றூண்கள். கந்து என்றால் பற்றுக்கோடு.

கொண்டி மகளிருங்கடத்துறையில் மூழ்கிய பின் அம்பலத்தினை மெழுகி, மாலையில் விளக்கேற்றி, கந்திற்குப் பூச்சூட்டி வழிபட்டனராம். இவ்வாறு வழிபடப் பெற்ற கந்துகள், பின்னர் தனித்தும், பீடத்துடனும் சிவலிங்கங்களாக வழிபடப்பெற்றன. கந்துடைப் பொதிகள் கோயில்களாயின. திருக்கன்றாப்பூர் கோயிலில் உள்ள மூலவரைத் திருநாவுக்கரசர், 'நடுதறி' என்றே குறிப்பிடுகிறார்.

சில இடங்களில் போரில் மடிந்த வீரர்களுக்கு எடுக்கப்பெற்ற நடுகற்களும், பத்தினிப் பெண்டிருக்கு எடுக்சுப்பெற்ற மகாசதிக் கற்களும் வழிபடப் பெற்றுள்ளன. அரசரின் உடல் புதைக்கப்பட்ட இடத்திலும், அனுபூதிமான்கள் அடங்கிய இடத்திலும் கோயில்கள் எழுப்பப்பெற்று உள்ளன. இவைகளைப் பள்ளிபடைக் கோயில்களென்பர்.

சங்ககாலத்தில் மதுரை மாநகரில் இருந்த முக்கண்ணன் கோயிலை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. முக்கட்செல்வன்நகர் என்ற பெயரால் அது கட்டப்படுகிறது. சிலப்பதிகாரம் பும்புகாரிலிருந்த, 'பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும், அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும், வால்வளைமேனி வாலியோன் கோயிலும், நீலமேனி நெடியோன் கோயிலும் பற்றிப் பேசுகிறது. மேலும்,

"அமரர் தருக்கோட்டம் வெள்யானைக்கோட்டம்,
புகர் வெள்ளை நாகர்தங்கோட்டம், பகல்வாயில்
உச்சிக்கிழான் கோட்டம், ஊர்க்கோட்டம், வேற்கோட்டம்,
வச்சிரக்கோட்டம், புறம்பணையாள் வாழ்கோட்டம்,
நிக்கந்தக்கோட்டம், நிலாக்கோட்டம்......"

ஆகிய பத்துக் கோட்டங்களும் பூம்புகாரில் இருந்தனவென்றும் அறிவிக்கிறது.

இத்துடன் மணிவண்ணன் கோட்டம் எனத் திருமால் கோயிலும், புறநிலைக் கோட்டம் என முருகன் கோயிலும் சிலப்பதிகாரத்தில் சுட்டப்பட்டுள்ளன. இந்திரவிகாரமும், இலகொளிச் சிலாதலமும் கோயில் போன்றனவே, மதுரைக் கோயில்களை,

*"நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலும்,*
*உவணச்சேவல் உயர்த்தோன் நியமமும்,*
*மேழிவலவன் உயர்த்த வெள்ளை நகரமும்,*
*கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்"*

என்று சிலம்பு பாடுகிறது. எனவே, கோட்டம், நியமம், நகரம் ஆகிய பெயர்களால் சங்க காலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் தமிழ் நாட்டில் நிறைய கோயில்கள் இருந்துள்ளன.

சங்ககால - சங்கம் மருவிய காலக் கோயில்கள் மரம், செங்கல், சுண்ணாம்பு ஆகியவைகளால் கட்டப்பெற்றிருந்தன. கி. பி. 5 -ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கோச்செங்கட்சோழன், 70 மாடக்கோயில்களைக் கட்டியுள்ளான். இதனைத் திருமங்கை ஆழ்வார். "எண்டோள் ஈசர்க்கு எழில்மாடம் எழுபது செய்து உலகாண்ட திருக்குலத்து வளச் சோழன்" என்று குறிப்பிடுகிறார். கோச்செங்கட்சோழன் உயரமான பீடத்தில் குறுகிய வழியினையுடைய மாடக்கோயில்களைச் செங்கல், சுண்ணாம்பு, மரம் ஆகியவைகளைக் கொண்டு கட்டியுள்ளான் கோச்செங்கட்சோழன் காலத்திலிருந்து கோயில் கட்டும் ஆர்வம் தமிழகத்தில் பலருக்கும் எழுந்தது.

இராண்டாம் நரசிம்ம பல்லவன் காஞ்சியில் கயிலாசநாதருக்கு முதன் முதலில் கல்லால் கோயில் கட்டினான். அதே காலத்தில் திருவுடை மன்னருக்கு மட்டுமன்று, பொருளில்லாத மக்களுக்கும் கோயில் கட்டும் ஆர்வம் இருந்ததை, பூசலார் நாயனார் புராணம் காட்டுகிறது. பல்லவன் பெரும் பொருட் செலவில் கட்டிய கற்றளிக்குச் செல்லாமல் பூசலார் மனத்தில் கட்டிய கோயிலுக்கு குடமுழுக்கன்று இறைவன் எழுந்தருளியது, அன்று எளியவரும் கோயில் கட்ட எழுச்சியை தந்தது.

பல்லவர்கள் கற்களை அடுக்கிக் கோயில் கடடுவதற்கு முன் பாறைகளைக் குடைந்தும் கோயில்கள் அமைத்துள்ளனர் என்பதை மகாபலிபுரத்திலும், பனமலையிலும் காணுகிறோம்.

இப்படி முற்காலச் சோழர்களாலும், பல்லவர்களாலும் வளர்ந்த கோயிற் பணி கி. பி. 6- ஆம் நூற்றாண்டு முதல் 12- ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் பாய்ந்த பக்தி வெள்ளத்தால் வளம்பெற்றது. இடைக்கால, பிற்காலச் சோழர் காலங்களில் அது மிகவும் செழித்தது. முதலாம் இராசராசனும் அவனுடைய குடும்பத்தினரும் கோயிற்பணிகளில் தலைசிறந்து விளங்கினர். அவர்களைத் தொடர்ந்து தமிழகத்தை ஆண்ட நாயக்க மன்னரும் பல கோயில்களைக் கட்டினர். இவ்வாறு சங்ககாலம் முதலாக இன்றுவரை தமிழகத்தில் கோயிற்பணி தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

**பாடல்பெற்ற தலங்கள் :**

இத் திருக்கோயில்களின் சிறப்பை உலகுக்குப் பரப்பியவர்கள் நாயன்மார்களும், ஆழ்வார்களும், பிற அடியார்களுமாவர். அவர்களில் பலர் தலந்தோறும் சென்று பாடி, அத்தலத்தின் புகழைப் பரப்பினர். அவ்வாறு பாடல்பெற்ற தலங்கள் தனிச் சிறப்படைந்தன.

தேவாரப் பாடல்பெற்ற தலங்கள் 275 உள்ளன. மங்காள சாசனம் பெற்ற 108 திருமால் பதிகளில் மண்ணுலகில் 106 உள்ளன.

## குடமுழுக்கு :

ஒரு கோயிலைப் புதிதாக நிர்மாணித்த பின்னரும், பழைய கோயிலைப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையும் கும்பாபிஷேகம் செய்விக்க வேண்டுமென ஆகமங்கள் கூறுகின்றன. கும்பாபிஷேகத்தைப் பெருஞ்சாந்தி என்றும் குடமுழுக்கு என்றும் திருக்குட நன்னீராட்டு விழா என்றும் குறிப்பிடுவர். வைணவர் அதனை 'சம்புரோட்சணம்' என்பர்.

## குடமுழுக்கின் தேவை :

இறைவன் எங்கும் இருக்கிறான் எனினும் சில இடங்களில் மட்டுமே அவன் பிரகாசமாக இருக்கிறான். அவ்விரு இடங்களாவன ஒன்று கோயில்; மற்றொன்று அடியார் உள்ளம். ஏனைய இடங்களில் அவன் அப்பிரகாசமாக - மறைவாக உள்ளான். ''மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்'' என்பர்.

இவ்விரு இடங்களில் மட்டும் இறைவன் பிரகாசமாய் இருப்பதேன்? கோயிலில் அவன் முறைப்படி வழிபடப்பெறுகிறான். குழந்தையும் தெய்வம் கொண்டாடும் இடத்திலல்லவா மகிழ்ச்சியாக இருக்கும். ஆதலின், எல்லா இடங்களிலும் இறைவன் உறக்க நிலையில் இருப்பினும் கோயிலில் முறையான கிரியைகளால் அவன் இயங்கும் நிலையில் உள்ளான். அதேபோல் அடியார் இறைவனை எப்போதும் உள்ளத்தினுள்ளே எண்ணிக் கொண்டே இருப்பதனால், அவன் அடியார் உள்ளத்திலும் பிரகாசமாக இருக்கிறான். ''நினைப்பவர் மனமே கோயிலாகக் கொள்பவன்'' அல்லவா அவன்! அவனுக்கு ''உள்ளம் பெருங்கோயில்; ஊனுடம்பே ஆலயம்.'' உள்ளத்தில் அவனுருவை எழுதிக்கொள்ளும் முன்னர் கோயிலில் அவன் குறியிடத்தே மனத்தை ஒன்றவிடவேண்டும். ஒன்றியிருந்து நினைப்பது தானே பக்தி அவ்வாறு ஒன்றச் செய்யக் கோயிலின் கண்ணுள்ள மூர்த்தங்கள் சக்திடையவனாக இருத்தல் வேண்டும். கோயிற் சிலையிலும் கோயிலிலும் இறைவன் எங்கும் இருப்பது போல் மறைந்திருந்தால் மட்டும் போதாது; இயங்கும் நிலையில் பிரகாசமாக இருத்தல்வேண்டும் ஆதலின், கோயிலிலும் சிலைகளிலும் மறைந்திருக்கும் இறைசக்தியை இயங்கச் செய்வதற்காகச் செய்யப்படும் கிரியைகளே கும்பாபிஷேகம் எனப்படுகிறது.

## குடமுழுக்கு முறை :

கோயிலைக் கட்டி முடித்து, சிலைகளை வடித்துக் கோயிலினுள் எழுந்தருளச் செய்தபின், ஆச்சார்யர்கள் கோயிலுக்கு வடகிழக்குத் திசையில் ஒரு மண்டபம் அமைப்பர். அது யாகசாலை எனப்படும். யாகசாலையில் கோயிலில் உள்ள ஒவ்வொரு மூர்த்தியையும் விமானத்தையும், கோபுரத்தையும் கடவடிவில் எழுந்தருளச் செய்வர். செம்புக்குடத்தினுள் புனிதநீரை நிரப்பி மாவிலை, தேங்காய், தர்ப்பை சந்தனம், நூல்பொன், ஆடை ஆகிய இவைகளைக் கொண்டு கும்பத்தைஅலங்காரம் செய்து கடத்தை உருவாக்குவர்.

கும்பம், மூர்த்தியின் வடிவம் ஆகும். கும்பத்தின் மீது சார்த்தப் பெற்றுள்ள ஆடை தோலைக் கிறிக்கும். கும்பத்தின் மேலே பூசியுள்ள சந்தனம் இரத்தத்தைக் குறிக்கும். கும்பத்தினுள் உள்ள நீர் ஊன்நீர் (அமிர்தம்) ஆகும். கும்பத்தின் மேல் தருப்பையால் முடிந்து வைக்கப்பட்டுள்ள கூர்ச்சம் எலும்பாகும், கும்பத்தினுள் இடும் பொன் முதலியன வீரியமாகும். கும்பத்தை

தா.னியங்காளல் ஆகிய ஆசனந்தின் மேல் வைத்திருப்பர். ஆச்சாரியர் தம் மந்திர உச்சரிப்பினால் இக்கும்பமாகிய உடம்பில் உயிர் ஏற்றுவர். ஆச்சார்களின் மனத்தில் மந்திர ரூபமாய் ஒளிவிடும் இறைசக்தி கும்பத்திற்கு எழுந்தருகிறது. கும்பத்தில் எழுந்தருளிய சக்தியை மூர்த்தியின் மீதும், விமானத்தின் மீதும், கோபுரத்தின் மீதும் அபிஷேகம் செய்கிற போது அவைகளுள் இறையருள் ஏற்றுவிக்கப்படுகிறது. அவைகளின் உள்ளுறையும் சக்தி இயங்கு சக்தியாகத் தூண்டிவிடப் படுகிறது. பழைய கோயில்களில் கடத்தினுள் பழைய மூர்த்திகளை ஆகர்ஷனம் செய்து, மந்திரத்தால் அச்சக்தியை வலுவேற்றி மீண்டும்அச்சக்தியை மூர்த்தியினிடமே அபிஷேக முறையில் கொண்டு சேர்ப்பர். இதுவே கும்பாபிஷேக முறை ஆதும். ஆதலின் மந்திரத்தினாலும் கிரியைகளிலும் மூர்த்திகளுக்கு சக்தியை ஊட்டுவதே குடமுழுக்காகும்.

**கும்பாபிஷேக கிரியைகள் :**

விதை நெல்லில் உயிர் உறக்க நிலையில் உள்ளது. விதை நெல்லில் நீரைச் சேர்த்தவுடன் அது விழிப்படைந்து முளைத்து வளர்ந்து பயன்தருகிறது. அதுபோல் உறக்க நிலையில் சக்தி அடங்கியிருக்கும் சிலையில் குடநன்னீரைச் சேர்த்தவுடன் சக்தி இயக்கம்பெற்று வழிபடுகின்றவர்களுக்கு அருளை வாரி வழங்குகின்றது. இத்தகைய சக்தியை ஊட்டும் கிரியைகள் விரிவானவை. அவைகளைச் சுருக்கமாகக் காண்போம்.

குடமுழுக்கிற்கென நல்லநாளும் நேரமும் குறித்தபின் குடமுழுக்கிற்குச் சில நாட்களுக்கு முன்னரே யாகசாலையை உருவாக்கி அதில் ஒன்பது குண்டங்களும் தேவையான பீடங்களும் அமைக்க வேண்டும். பின்னர் அனுக்ஞை, விக்னேசுவர பூசை, இரட்சோக்னம், கிருகமதம், வாஸ்து சாந்தி, மிருத் சங்கிரகணம், அங்குரார்ப்பணம், இரட்சாபந்தனம், கலாகர்ஷணம் முதலிய கிரியைகளைச் செய்யவேண்டும்.

அனுக்ஞை என்பது குடமுழுக்கிற்காக இறைவனுடைய அனுமதியை வேண்டுதல், விக்னேஸ்வர பூஜை, குடமுழுக்குத் திருப்பணி இடையூறின்றி நடைபெறுவதற்காகச் செய்யப் படுவது. இரட்சோக்னம் அரக்கர்களை அகற்றும் பொருட்டு எண்திசையிலும் பைரவர்களையும் நடுவில் இலக்குமியையும் வைத்து வழிபடுவது, கிருகமகம் என்பது ஒன்பது கிரகங்களையும் நட்சத்திரங்களையும், அவைகளின் அதிதேவதைகளையும் பூசிப்பது. வாஸ்து புருஷனுக்கு சாந்தி செய்வது வாஸ்து சாந்தியாகும். மிருத் சங்கிரகணம் என்பது மண்ணெடுக்கும் கிரியையாகும். அங்குரார்ப்பணம் என்பது பாலிகை தெளிப்பது ஆகும். ஆச்சாரியன் காரியத்தை முடிக்கக் காப்பணிவதே இரட்சாபந்தனம், கலா கர்ஷணம் என்பது இறைவனுடைய சக்தியை பிம்பத்தினுள் இழுப்பதாகும்.

இவ்வாறான கிரியைகளைச் செய்து ஆச்சாரியன் சர்வதாதகனின் வழிநின்று நான்கு அல்லது ஆறு காலங்களில் யாகம் செய்து தூப தீபங்கள் காட்டி கடைசிகாலத்திற்குப் பின் கடங்களை மேளதாளத்துடன் எழுந்தருளச் செய்து மூர்த்திகளுக்கும் விமானங்களுக்கும், கோபுரங் களுக்கும் அபிஷேகம் செய்வித்தலே கும்பாபிஷேகம் ஆகும்.

கும்பாபிஷேகத்திற்குப்பின் நாற்பத்தைந்து நாட்கள் நடைபெறும். அபிஷேகத்திற்கு மண்டலாபிஷேகம் என்று பெயர். கும்பாபிஷேக தினத்தை ஒவ்வோர் ஆண்டும் கொண்டாட வேண்டும். அதனை சம்சத்ஸராபிஷேகம் என்பர். பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குடமுழுக்கு நடைபெறவேண்டும். இவ்வாறு முறையாக அபிஷேக ஆராதனைகள் நடைபெறுவ தோடு நாள்தோறும் நடைபெறவேண்டிய நித்ய பூசைகளும், விசேஷ நாட்களில் நடைபெற வேண்டிய நைமித்திக பூசைகளும் முறையாக நடைபெறும் கோயிலில் தெய்வ சாந்நித்யம் - இறையருட் பொலிவு இருக்கும். அங்கே சென்று வழிபடுவோர் இறையருளைப் பெறுவது திண்ணம்.

  

# கொப்புடையவள் துதிமாலை

நா. நாராயணன், ஈப்போ (மலேசியா)

**காப்பு**

கொப்புடையாள் பேரில் குறிப்பாகப் பாடுதற்கு
செப்பரிய தும்பிக்கை சேர்.

கொப்புடைய தாயே போற்றி குலமகளாம் கொடியே போற்றி
செப்பரிய தேவி போற்றி திருமகளின் அருளே போற்றி
மெய்ப்பொருளின் ஒளியே போற்றி மேலான மணியே போற்றி
இப்பெரிய காரைநர்க்கு ஏற்றத்தை நல்கும் தாயே! 1

கற்பகத்தின் தருவும் நீயே காண்பரிய சோதி நீயே
இற்பரத்தின தெய்வமகளே தெவிட்டாத கன்னி அம்மா
முற்பிறப்பில் யானே செய்த முதுவினைகள் அறுப்பாய் போற்றி
கற்சிலையாம் அழகே உன்னைக் கண்ணாரக் களித்தேன் யானே! 2

வாணிபத்தை ஏற்றம்செய்து வரலாற்றை படைத்தாய் அம்மா
பேணியுனைப் போற்றிசெய்யப் பெர்தாககிப் பெருமை சோப்பாய்
தோணிபோல் துணையுமாவாய் தொல்மரபை வளர்க்கச் செய்வாய்
ஆணிபோல் பதிந்தேஉள்ளம் அருளினையே சுரக்கும் அம்மே! 2

காலையிலே வளரும் மலராகி கருத்தோடு துதியும் செய்ய
மாலையிலே மலரும் பூவால் மனத்தோடு மாலை யிட்டுச்
சோலையிலே பெருகும் கனிகள் சொலலரிய அன்பில் வழங்கில்
வாலையினின் மணமும் முடியும் வளமான வாழ்வும் வருமே! 4

சித்திரையில் சிறப்புமிக்கத் திருவிழா உனக்குச் செய்து
முத்திரைப்பொன் மணிகள் பூண்வர் மூவாத மேனி உன்மேல்
அத்திரையின் கடலகள் தாண்டி அசையாத உறுதி கொண்டு
பத்திரமாய்ப் பொருளும் சேர்க்குப் பக்திமான்கள் வாழிவாழி! 5

கோழியினைச் சுற்றும் குஞ்சு குறைவின்றி வாழுமாப்—போல்
சூழியுனைச் சொந்தம் கொண்டால் சுகமான வாழ்வும் செய்வாய்
ஆழியினில் விழ்த்திடக்கால அலையாமல் கரையும் சேர்ப்பாய்
மேழியினை வளர்க்கச் செய்வாய் மேகமதாய்ப் பொழியும் தாயே! 6

பல்லாக்கில் பவனிவைத்து பல்லோரும் பதிகம் பாடி
சொல்லாக்கம் செய்வோர் தானும் சொல்லினிய துதியும் செய்ய
மல்லாக்கக் கிடந்து நோற்று மாவிளக்கும் ஏற்றி வைத்து
நல்லாக்கம் செய்வோர் தமக்கு நலமெல்லாம் அருள்வாய் தாயே! 7

தேகத்தில் உள்ள நோய்கள் தீர்த்திடவே வேண்டினேனே
போகத்தில் நிலைத்து வாழப் போற்றினேன் உன்னைத்தாயே
மோகத்தில் மதியை மீட்பாய் முறையான வழியைக் காட்டி
சோகத்தை நீக்கும் தாயே! துன்பத்தைப் போக்கும் அம்மே! 8

ஒப்பிலா மணியே போற்றி உள்ளத்தில் மலர்வாய் போற்றி
உப்பிலாப் பண்டம் போல உன்னருள் இன்றி ஆகா
சிப்பியும் முத்தும் கொண்ட செல்விதாள் அணிகள் போற்றி
செப்பினேன் உந்தன் நாமம் சிறந்திட உலகில் யானே! 9

கந்தனைப் போன்ற பிள்ளை கனிந்துநீ அருள்வாய் அம்மா
சிந்தனை எல்லாம் தந்தேன் சேவடி மறக்கிலேனே
முந்திநீ வந்தே எந்தன் மொழியினில் அழகு செய்வாய்
பைந்துனர் அன்பன் சொல்லை பரப்பிடல் செய்வாய் தாயே! 10

## நூற் பயன்

அம்மன் மாலை அன்பாய் பாடிட
இம்மண் வாழ்வும் இனிதாம் உறுதி
நம்முன் நலமும் நாட்டில் வளமும்
செம்மைச் சிறப்பும் சீரும் வருமே.



## காரைக்குடி

# ஸ்ரீ கொப்புடையநாயகி திருப்பள்ளியெழுச்சி

சிவநெறிக் கவிஞர். இராகவன்முத்து. B. Sc.

### காப்பு

கொப்பை உடையாளைக் கோமானுய் வாழ்விக்கும்
மைப்படிந்த கண்ணுளை மாதரசை— இப்புவியில்
பள்ளி எழப்பாடும் பைந்தமிழில் கற்பகமே
துள்ளி வருவாய்துணே.

### நூல்

உலகில் இன்பம் கொழித்திருக்க
உயிர்கள் என்றும் செழித்திருக்கக்
கலையும் சீரும் வளர்ந்திருக்கக்
கடைக்கண் காட்டிக் களித்திருக்க
நிலையாய்க் காரைப் பெருநகரில்
நின்றே எம்மைக் காப்பவளே!
மலையின் செல்வீ! கொப்புடையாய்!
மகிழ்ந்தே பள்ளி எழுந்தருள்வாய்! 1

சீரார் காரைத் திருநகரில்
செல்வ வணங்கள் நிறைந்திருக்கப்
பாரோர் கூடித் தமிழுரைத்துப்
பயன்பெற் றென்றும் மகிழ்ந்திருக்கக்
காராய்ப் பெய்யும் கருணையினல்
காவல் செய்யும் கொற்றவையே!
ஏரார் செவியில் கொப்புடையாய்
இனிதே பள்ளி எழுந்தருள்வாய்! 2

அம்மே! கொப்பை உடையாளே!
அடியார்க் கென்றும் துணையாளே!
சும்மா உன்றன் திருநாமம்
சொல்லின் சேரும் சுகமென்றே
இம்மா நிலத்தார் இசைமொழியை
எளியேன் கேட்டேன்! வளம்பெறவே
அம்மா! உன்றன் அடிதொழுதேன்
அன்பே! பள்ளி எழுந்தருள்வாய்! 3

பாட்டுக் கிசையும் பரமனிடம்
படர்ந்து மலரும் பசுங்கொடியே!
நாட்டில் பலரும் நட்பினராய்
நன்மை தருவார் போல்வருவார்
ஆட்டுக் குதவும் புலிபோல்வார்
அதனுல் அஞ்சி உனேயடைந்தேன்
வாட்டம் போக்கும் கொப்புடையாய்!
வரங்கள் தரவே எழுந்தருள்வாய்! 4

இமைக்கும் பொழுதில் இன்தமிழால்
எவரும் வியக்கும் கவிபாடி
அமைக்கும் பெருபை அளித்தவளே!
அம்மே கொப்பை உடையவளே!
சுமைக்கும் துயர்க்கும் பிறந்துழலும்
தொல்லே வினையை அறக்களேந்தே
எமக்கும் இன்பப் புகழ்ச்சுகங்கள்
இணேக்கப் பள்ளி எழுந்தருள்வாய்! 5

காரைக் காலின் புனிதவதி
கயிலே மீது தலேயாலே
ஊரக் கண்ட உடையவனும்
உவந்தே ''அம்மா'' எனஅழைக்க
ஈர நெஞ்சால் விழிகாட்டி
இன்பம் செய்த உமையவளே!
வாரி வழங்கும் கொப்புடையாய்!
வாசப் பள்ளி எழுந்தருள்வாய்! 6

நாட்டில் அறங்கள் நாலெட்டும்
நாழி நெல்லால் வளர்த்தவளே!
கோட்டை யூரார் உன்னடியார்
கொடுமைப் பசியாம் துயர்மாற்ற
ஓட்டம் நடையாய் உணவுடனே
ஊரின் எல்லே வந்தவளே
நீட்டும் கொப்பை உடையவளே! 7
நினேந்தே பள்ளி எழுந்தருள்வாய்!

செம்மை வண்ணப் பட்டுடுத்திச்
சிங்கக் குருளே மீதமர்ந்து
மும்மைப் போகம் தருபவளே
முத்துத் தமிழுக் குரியவளே!
வெம்மைத் துன்பம் போயகல
வேண்டும் சுகங்கள் யாம்பெறவே
அம்மே கொப்பை உடையவளே!
அன்பால் பள்ளி எழுந்தருள்வாய்! 8

கல்லைப் பொன்னாய்ச் செயவல்லாய்!
கடலை மலையாய் உயர்த்திடுவாய்!
சொல்லை மலராய்த் தூவுகிறேன்
சோகம் களைந்தே சுகந்தருவாய்!
வில்லாய் மலையைப் பிடித்தசிவன்
விருப்பத் துணையே கொப்புடையாய்!
ஒல்லை வந்தே தொழுதிருந்தோம்
உணர்ந்தே பள்ளி எழுந்தருள்வாய்! 9

சொல்லாய் நின்றாய் சுருதியிலே!
சுகங்கள் ஆனாய் வாழ்வினிலே!
நல்லார் எல்லாம் தலைக்கூடி
நாளும் வணங்கும் நாயகியே!
கல்லா மனத்தேன் நாவினிலும்
கவியாய் மலர்ந்து நிற்பவளே!
எல்லாம் வல்லாய் கொப்புடையாய்!
இனிதே பள்ளி எழுந்தருள்வாய்! 10

கொல்லும் வில்லைக் கைக்கொள்ளும்
குறவர் பெண்ணை மணந்தெண்ணம் .
வெல்லத் துணைசெய் தமிழ்க்கடவுள்
வெற்றிக் கையில் வேல்தந்தாய்
நெல்லும் கரும்பும் மிகவிளைய
நேயம் கொண்டார் துயர்களையச்
சொல்லும் தமிழின் உயிராவாய்!
சோதிக் கொப்பே எழுந்தருள்வாய்! 11

சைவம் தமிழே உயிரென்னும்
தனத்தின் வணிகத் திருமக்கள்
கைகள் கூப்பித் தொழுதிருக்கக்
கண்ணின் அன்புக் "கடை காட்டி"
உய்வை அருளும் உமையளே!
உயர்வாம் கொப்பின் திருப்பெயராய்!
நையும் என்றன் துயர்களைய
நயந்தே அம்மா எழுந்தருள்வாய்! 12

ஐயம் தேடும் பரம்பொருட்கும்
அரச போகம் உரிமையெனச்
செய்யும் பாண்டித் தயிழ்மகளே!
தேவீ! கொப்பை உடையவளே!
நெய்யைப் பாலைச் செந்தேனை
நிகர்க்கும் இனிமைத் திருமகளே!
கைகவ் கூப்பிக் கழல்பணிந்தேன்!
களிப்பை அருளத் துயில்களைவாய்! 13

கவிகள் மணக்கும் காரைநகர்
கண்கள் மணக்கும் பொலிவுயரச்
செவிகள் மணக்கும் பொலிவுயரச்
செம்மை மணக்கும் பேருயரப்
புவியில் மணக்கும் கொப்புடையாய்!
போற்றிப்பணிவேன் வாழ்க்கை எலாம்
குவியும் செல்வச்சுகம் மணக்கக்
குளிரும் விழியாய்! துயில்களைவாய்! 14

வாழ்க்கை வணிக முதலானுய்!
வாக்கில் நின்று நிலையானுய்
காக்கை நிறத்தைக் கடல்நிறத்தை,
கனகச் செம்மை நிறமதனை
நோக்கக் கருதாய்! அகத்தூறும்
நோன்பாம் காதல் தனைநயந்தே
பூக்கும் கருணைத் திருமகளே!
புகழார் கொப்பே துயில்களைவாய்! 15

அருளார் மொழிகட் கரசரென
அகிலம் புகழும் குருநாதர்
பொருளார் உரையாம் அமுதுண்டார்
புந்தி தெளிந்தே ஒளிர்வதுபோல்
இருளார் ஞாலம் தனைவிளக்க
எழுந்தான் பரிதி களிகூட்டி!
மருளார் நெஞ்சச் சுமையகற்றும்
மாண்பார் கொப்பே! துயில்களைவாய்! 16

இரவாம் கூத்து முடிந்திடவே
எழிலார் மீனக் கலைஞரெலாம்
உரிமை வான அரங்ககன்ருர்!
ஒளிசேர் வாழ்க்கை தொடங்கியதே!
பெருமை சான்ற மனிதரெலாம்
பேணி நடிக்க முனைந்தனரால்
இருமை வாழ்வும் எமக்கருள
இசைசேர் கொப்பே! துயில்களைவாய்! 17

தேனெலி யாகும் தமிழ்ஒலியால்
திருமுறை ஓதும் இனியவர்கள்;
வானெலி பாடும் இசைமறையால்
மனவிளக் கேற்றும் அடியவர்கள்;

ஞானியர் ; யாரும் காரைநகர்
நாயகி உன்னைப் பணியவந்தார் !
நானிலம் காக்கும் கொற்றவையே !
நலஞ்சேர் கொப்பே ! துயில்களைவாய் ! 18

தீயின் செம்மை ஒளியானாய் !
தீண்டும் தென்றல் சுகமானாய் !
தோயும் வையைப் புனலானாய் !
தூய்மை வான வெளியானாய் !
ஆயும் அன்பர்க் கிசையானாய் !
அறிஞர்க் கென்றும் அரிதானாய் !
ஆயன் தங்கை ஆனவளே !
அம்மா ! கொப்பே ! துயில்களைவாய் ! 19



உ

# தேரில் தெரியும் கொப்புடையாள்

— கவிஞர் இராகவன்முத்து

தேரில் ஏறும் திருமகளே!
செல்வத் தமிழார் பசுங்கிளியே!
நேரில் வந்து காணகில்லேன்
நெஞ்சில் கண்டு கழல்பணிந்தேன்!
சீரில் செழித்த தமிழ்மாலை
செல்லப் பிள்ளை படைக்கின்றேன்!
காரைக் குடியின் கண்மணியே
கனிவாய் ஏற்றுக் கைதருவாய்! 1

காவல் இசைந்த கடமையளே!
காதல் உணர்ந்த கருணையளே!
ஆவல் நிகழ்த்தி அடியவரை
அன்பால் வாழ்த்தும் உமையவளே!
பூவின் மணக்கும் தமிழ்கேட்டுப்
பொன்னை மழையாய்ப் பொழிமுகிலே
வாழ்வை மலர்த்தும் கொப்புடையாய்
வடிவார் தேரில் வருவாயே! 2

சூலம் பொலியும் கொற்றவையே
சோதிப் பொருளாம் நற்றமிழே!
காலம் கடந்த பழமையளே!
கருணை செறிந்த புதுமலரே!
முலம் ஆன முழுப் பொருளே!
முதன்மை உதவும் கொப்புடையாய்
கோலம் பொலியக் குடி உயரக்
கொடி கொள் தேரில வருவாயே! 3

காட்டுக் கோயில் பழந்தலத்தில்
கருணை விளக்காய் எழுந்தவளே!
நாட்டுக் குள்ளும் நடமாடி
நலங்கள் விளைக்கும் மகராணி!
பாட்டுக் கோயில் கருவறையும்
பரிவாய் அமரும் பரம்பொருளே!
தேட்டக் கனிவை எமக் கூட்டத்
தேரில் வருவாய் திருமகளே! 4

உலகின் நாயகி நீயாவாய்
உயிரின் தாயகம் தான் ஆவாய்!
கலகம் புரியும் கயவர்களைக்
களையாய் அழிக்கும் அரசுடையாய்!
புளகம் நிலைக்க எமககருளும்
பொன்னே பொன்னார் மலைமகளே!
திலகம் வழங்கும் அருட்கரத்தாய்!
தேரில் வருவாய் திருமகளே! 5

கண்டு பணிந்த செல்வர்களும்
காணக் கிடையா அன்பர்களும்
கண்டு முதலாய் உணர்பவளே!
கனிவின் வடிவாம் உமையவளே!
செண்டுக் கழலின் சார்பளித்துச்
சிறியேற்(கு) உயர்வைச் சேர்த்திடுவாய்!
பண்டைப் பொருளே பசுங்கிளியே!
பாட்டுத் தேரும் அமர்ந்தருள்வாய்! 6

மண்ணும் தணலாய்க் கொதித்துவர
மழைக்காய் உலகம் தவம் இருக்கக்
கண்ணும் எரியும் நிலை இருக்கும்
கடுமைக் கோடைப் பருவத்தும்
தண்ணீர் வளங்கள் நிறைவாக்கித்
தாங்கும் கருணைக் கொப்புடையாய்!
பொன்னார் தமிழ்ப்பா மாலை எனும்
புதுமைப் படையல் ஏற்றெழுவாய்! 7

காலை உதிக்கும் கதிரவனும்
கடமை தொடங்கும் முன்பாகக்
காலைத் தொழுதற்(கு) இசைவாகக்
கருணை நோக்கம் உடையவளாய்க்
கீழைத் திசையைத் தான் நோக்கிக்
கேண்மை வளரக் கொலு விருப்பாய்
சீலம் செழிப்பை வழங்கிடவே
தேரில் வருவாய் கொப்புடையாய்! 8

கண்கள் என்னும் மழைமேகம்
கனிவாம் அருளைப் பொழிந்து வர
எண்ணற்(கு) அரிய சிவஞானம்
என்னும் சீலக் கொடி அசையப்
பெண்ணில் நல்ல தவக் கொழுந்தாம்
பீடார் கொப்பை உடையவளே
மண்ணில் அறமாம் வழித் தடத்தில்
மகிழ்வாம் தேரில் வந்தருள்வாய்! 9

பொன்னும் மணியும் அணியாகப்
பொலியும் செல்வக் கொப்புடையாய்
கண்ணும் கருத்தும் பதமலரில்
களிப்பாய் உடைய நல்லவரை
எண்ணிப் புரந்தே அரசாக்கி
இனிமை புரியும் கருணையினால்
பொன்னில் பொலியும் திருத்தேரில்
புகழார் வீதி வலம் வருவாய்! 10

---

உலகெலாம் வாழ்க
கொப்புடையநாயகி வாழ்க, பக்தி
வலமிகு நல்லோர் வாழ்க
மன்துபல் உயிர்கள் வாழ்க
நலமிகு தருமம் வாழ்க
நற்றமிழ்க் கலைகள் வாழ்க
நிலமிசை அன்பு செய்வோர்
நித்தலும் வாழ்க வாழ்க

— கம்பனடிப்பொடி சா. கணேசன்

# அதிக வரம் பெறலாம்

*பேராசிரியர் அருட்கவி கு. செ. இராமசாமி எம். ஏ., சிவகெங்கை*

## 1. தொன்மைக் கோலம்

குறள் வெண்பா இரண்டடிகளால் ஆனது. இதன் முதலடி நாற்சீரான் வரும் அளவடி; இரண்டாவது அடி முச்சீரான் வரும் சிந்தடி. நாற்சீரடி நீளமாகவும், முச்சீரடி கொஞ்சம் நீளம் குறைந்தும் காணப்படும்.

சிவமும் சக்தியும் சமபாகமாய்ச் சேர்ந்து விளங்கும் கோலம் அர்த்தநாரீஸ்வரர் திருக்கோலம். இதில் சிவாம்சமான வலது திருவடி நீளமாகவும், சக்தியம்சமான இடது திருவடி கொஞ்சம் நீளம் குறைந்தும் காணப்படும்.

மகா சிவபக்தரான சிவப்பிரகாச சுவாமிகளுக்கு, வள்ளுவப் பெருமானுடைய குறள் வெண்பாக்கள் ஒவ்வொன்றுமே அர்த்தநாரி சொரூபமாகத் தெரிகின்றது. நீளம் அதிகமான திருக்குறள் முதலடி சிவபிரான் திருவடியாம்! நீளம் குறைந்த இரண்டாவது அடி அம்பிகையின் சேவடியாம்!

*என்னடிகள் வெண்குறள்நேர்*
*அடிஇ ரண்டும்*
*என்தலைமேல் இருத்தும்இறை*
*வெங்கை நாட்டில்*

*— திருவெங்கைக் கலம்பகம்*

திருக்குறள் அடிகளை உமையொரு பாகன் திருவடிகளோடு சிவப்பிரகாசர் ஒப்பு நோக்கிப் பாடுவது நம் உள்ளத்தை உருக்குவதாக உள்ளது. சிவ-சக்தி ஐக்கிய சொருபமான அர்த்த நாரீஸ்வரர் திருக்கோலத்தை மாணிக்க வாசக சுவாமிகள், ''தொன்மைக் கோலம்'' என்று வருணிக்கின்றார்.

*தோலும் துகிலும்,*
*குழையும் சுருள்தோடும்,*
*பால்வெள்ளை நீறும்*
*பசுஞ்சாந்தும் பைங்கிளியும்,*
*சூலமும் தொக்க*
*வளையும் உடைத்தொன்மைக்*
*கோலமே நோக்கிக்*
*குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.*

*— திருவாசகம்*

ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியை, 'சிவ-சக்தி ஐக்கிய ரூபிணி' யாகப் போற்றுவதே சாக்த சம்பிரதாயம். இதற்கு ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் ஆதாரம்.

*ஸ்ரீ சக்ர ராஜ நிலயா*
*ஸ்ரீமத் த்ரிபுர ஸுந்தரீ*
*ஸ்ரீ சிவா சிவ சக்த்யைக்ய*
*ரூபிணி லலிதாம்பிகா ll*

*— ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்*

சிவ-சக்தி ஐக்கியம் அரிசியும் பருப்பும் கலந்தது போல் அமைந்த கலவை அன்று; பூவும் மணமும் போல் பொருந்தி விழங்குவது. ஆயினும் சக்தி விலகிவிடுமானுல் சிவம் தொழில் புரிய முடியாது போகின்றது!

*சிவமெ னும்பொருளும் ஆதி சக்தியொடு*
*சேரின் எத்தொழிலும் வல்லதாம்*
*இவள்பி ரிந்திடின் இயங்கு தற்கும் அரிது*
*அரிதெ னுமறை இசைக்குமால்...*

*— ஸௌந்தர்ய லஹரி*

ஏனென்ருல் சிவம் சும்மா இருப்பது. சக்தியே செய்வது. ஆகவே, ''சக்தி இருந்தால் செய்; இல்லையேல் சும்மா இரு'' என்ற பழமொழி பிறந்தது.

## 2. ஐந்தொழில் முதல்வி

''சாட்சியான இந்தச் சக்தி சங்கரனுக்கும் மங்கலத்தைச் செய்கிருள். இவள் சிவனை விட்டுப் பிரியாதவள். பிரிந்தால் சிவன் பயனற்றவன் ஆவான்'' என்பது ஸ்காந்த புராணம்.

:' குண்டலினி சக்தியினின்று பிரிந்தால் சிவனும் சவம்போல் ஆகருன்'' என்பது தேவீபாகவதம்.

''பராசக்தியான அம்பிகையோடு கூடியிருக்கும் போதுதான் படைத்தல், காத்தல், அழித்தல், கரத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் செய்து சிவபிரான் தம்முடைய ஈஸ்வரத் தன்மையை வெளிப்படுத்துகிருர்'' என்பது ஆதிசங்கரரின் ஸௌந்தர்ய லஹரி.

பிரம்மதேவன் வடிவில் இருந்து அம்பிகையே படைக்கின்ருள். நாராயணன் வடிவில் இருந்து காக்கின்ருள். ருத்திரன் வடிவில் இருந்து அழிக்கின்ருள். ஈஸ்வரன் வடிவில் இருந்து மறைக்கின்ருள். சதாசிவன் வடிவில் இருந்து அவளே அருள் புரிகின்ருள். ஐந்தொழில் முதல்வி அவளே என்பது லலிதா ஸஹஸ்ர நாமம்.

*ஸ்ருஷ்டி கர்த்ரீ ப்ரஹ்ம ரூபா*
*கோப்த்ரீ கோவிந்த ரூபிணி*
*ஸம்ஹாரிணீ ருத்ரரூபா*
*திரோதான கரீச்வரீ*
*ஸதாசிவா (அ)னுக்ரஹதா*
*பஞ்ச க்ருத்ய பராயளு*

*— ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்*

பிரம்மா, திருமால், ருத்திரன், ஈஸ்வரன், சதாசிவன் என்னும் ஐவரும் பஞ்ச பிரம்மாக்கள் எனப்படுவார்கள். ஐவருமே அம்பிகை நியமித்த அதிகாரிகள்! அம்பிகையின் கட்டளைப்படி இவர்கள் ஐந்தொழில் புரிகிருர்கள். மகாப் பிரளய காலத்தில் அவரவர் கடமையினின்றும் விடுபட்டு, பஞ்ச பிரம்மாக்களும், அம்பிகையிடம் லயமாகிவிடுகிருர்கள். சதாசிவன் அம்பிகை எழுந்தருளும் ஆசனத்தின் மேம்பலகை ஆகிருர். மற்றுள்ள நால்வரும் அரியணையின் கால்களாய் இருந்து அம்பிகையைத் தாங்குகிருர்கள். பஞ்ச பிரம்மாக்களும் பிரேதங்கள் ஆகிவிட, அம்பிகை, பிரேதங்களான ஆசனத்தில் அமர்ந்திருக்கின்றனளாம்!

*பஞ்ச ப்ரேதாஸ நாஸீநா*
*பஞ்ச ப்ரம்ம ஸ்வரூபிணீ*

*— லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்*

பிரேதங்களாய் விழுந்து விடாமல், பஞ்ச பிரம்மாக்களையும் உயிர் பெற்றுத் தொழில் புரிய வைப்பவள் பராசக்தியே ஆவாள்.

யாகத்தாலும், யோகத்தாலும், ''நானே பிரம்மம்'' என்ற பாவனையில், யாரும் பிரம்ம நிலை அடையலாம்; ஆனுல் ஒரு போதும் பராசக்தியாகி விட முடியாது! சக்தி சிவன்மனை என்பதும் கூட ஒருவகையில் உபசார வழக்கே என்பதை அன்பர்கள் இதனுல் உணரலாம்.

## 5. அவ்யாஜ கருணுமூர்த்தி

வியாஜம்—காரணம். அவ்வியாஜம்—காரணம் இல்லாதது. அம்பிகை காரணம் இல்லாமலே கருணை செய்பவள். இதனுல் 'அவ்யாஜ கருணுமூர்த்தி' எனப்பட்டாள்.

*அவ்யாஜ கருணுமூர்த்தி:*
*அஜ்ஞாந த்வாந்த தீபிகா*

*— ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம்*

சிறுத்தொண்டர் வாளால் மகவு அரிந்து ஊட்டினுர். திருநீலகண்டர் மனைவியின் சூளால் இளமை இன்பம் துறந்தார். கண்ணப்பரோ ஆறு நாள் பழக்கத்தில் இரு கண்களையும் தோண்டி எடுத்து அப்பினுர்.

இவைபோல் சோதனை வைத்தே சிவபெருமான் தம்முடைய திருத்தொண்டர்களுக்கு அருளினுர். ஆனுல் அம்பிகை சோதனை வைப்பதில்லை. முன்வினை பின் வினைகளைச் சீர்தூக்கிப் பார்ப்பதில்லை. சரணடைந்த பக்தனைத் தாங்கி அருள்வதே அவளுடைய தொழிலாக உள்ளது.

''பரமசிவனுடைய மனத்திற்கும் வாக்குக்கும் எட்டாத ஏதோ ஒரு கருணை, உலகை ரட்சிப்பதற்காக, 'அருணு' என்ற பராசக்தி வடிவில் விளங்குகின்றது'' என்பார் ஆதிசங்கரர்.

*ஜகத் த்ராதும் சம்போர்*
*ஜயதி கருணு காசித் அருணு* — *சௌந்தர்ய லஹரீ*

பரமேஸ்வரனுடைய கருணையே பராசக்தி வடிவில் விளங்குகின்றது என்பதைச் சிவஞான சித்தியாகும்.

அருளது சக்தி யாகும்
அரன்தனக்கு! அருளை இன்றித்
தெருள்சிவம் இல்லை; அந்தச்
சிவமின்றிச் சக்தி இல்லை.
— சிவஞான சித்தியார்

என்று குறிப்பிடுகின்றது.

## 4. திருத்தாட்கொள்ளும் தாய்

ஏனைய தேவதைகளின் சங்கார முறையில் இருந்து தேவியின் சங்கார முறை முற்றிலும் மாறுபடுகின்றது.

இராமாவதாரத்திலும் கிருஷ்ணவதாரத்திலும் மற்றுள்ள திரு அவதாரங்களிலும் திருமால் எதிரிகளை எச்சமில்லாமல் அழித்தொழித்தார். அதுபோலவே திரிபுராந்தகராக எழுந்தபோது, சிவபெருமானும், பகைவர்களைப் பஸ்பமாக்கினார். ஆனால் அம்பிகையோ தன்னை எதிர்த்த மகிஷனையும், முன்னைவினையை மாற்றி, தன்னுடைய வாகனமாய் ஏற்றருளினாள்.

ஆனைத்தோல் போர்த்து
புலியின் உரிஉடுத்து
கானத்து எருமைக்
கருந்தலைமேல் நின்றாயால்!
வானோர் வணங்க
மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாய்
நடுக்கின்றி யேநிற்பாய்! — சிலப்பதிகாரம்

முருகன் சக்திகுமாரன் சக்தி ஆயுத வீரன் ஆகவே சிவனும் தாயின் வழியில் நின்று, தன்னுடைய எதிரியான சூரனைத் திருத்தி ஆட்கொண்டான்.

தீயவை புரிந்தா ரேனும்
குமரவேள் திருமுன் உற்றால்
தூயவர் ஆகி, மேலைத்
தொல்கதி அடைவர் என்கை
ஆயவும் வேண்டும் கொல்லோ?
அடுசமர் அந்நாள் செய்த
மாயையின் மகனும் அன்றோ
வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்! — கந்தபுராணம்

## 5. அதிக வரம் பெறலாம்

சத்திநிபாதம் எய்திய பின்னரே திருவடிப்பேறு பெறலாம் என்பது சைவ சித்தாந்தம் சக்தி நிபாதம் என்றால் தேவியின் திருவருள் வீழ்ச்சி காரைக்காலம்மையார் தலையால் நடந்து

கயிலை மலையில் ஏறினர். அம்மையார் மீது, “ சிலைநுதல் இமயவல்லி திருக்கண் நோக்கு உற்றது.” அதன் பின்னரே அவருக்குத் திருவடிப்பேறு கிட்டியது.

வைணவ மரபிலும் முதலில் தாயார் திருவருள் பெற வேண்டும். அதன் பின்னரே பெருமாள் அனுக்கிரகம் கிட்டும். இராமாயணத்தில், சீதாதேவியின் அருள் பெருத வாலியும் இராவணனும், இராமபாணத்தால் வதமானுர்கள். தேவியின் திருக்கண் பார்வை படிந்த காரணத்தால், இராமபாணத்திற்குத் தப்பி, விராதனும் காகாசுரனும் வாழ்வு பெற்ருர்கள்.

கூத்தப்பிரான் வலக்காலை ஊன்றியும், இடக்காலை எடுத்து வீசியும், நடனம் ஆடுகின்ருர். ஆட எடுத்த பாதம் அம்பிகையின் பாதமே ஆகும். தூக்கிய அந்தத் திருவடிதான் நமக்கு என்றென்றும் துணையாவது என்று பாடுகின்ருர் கவியோகி சுத்தானந்த பாரதியார்.

*தூக்கிய திருவடி துணையென நம்பினேன்*
*துரிய நடராஜனே!* — *சுத்தானந்த பாரதியார்*

மார்க்கண்டேயனுக்காகக் கூற்றுவனை உதைத்தது சுவாமியின் கூருன வலக்கால் அன்று. வலக்காலாயின் அது கூற்றுவனை மாய்த்திருக்கும்! அம்பிகையின் கூருன இடக்கால் தான்யமதருமனை உதைத்தது. அது மார்க்கண்டேயனை மட்டுமா, யமதருமனையும் காத்தது; இயற்கை நெறி முறைகளையும் காத்தது!

*கூற்று மரித்திட வேஉதை பார்வதி*
*யார்க்கும் இனித்தபெண் ணுகிய மான்மகள்*
*கோட்டு முலைக்கதி பா,கட வூர்உறைபெருமாளே!* — *திருப்புகழ்*

அம்பிகை உண்ணுமுலை உமையாள். அவளுடைய திருத்தனத்தில் சுரந்த பாலை முருகனும் அருந்தியதில்லை. ஆனுல் எம்பிரான் ஞானசம்பந்தர் அருந்திஞர். சிவபிரான் அருளாணையின்படி, அம்பிகையே, பொன் வள்ளத்தில் கறந்து திருஞானசம்பந்தருக்கு ஊட்டினுள். இந்த நன்றியை மறவாமல், முதற்பதிகத்தில் — முதற்பாடலில் — முதற்சொல்லில் வைத்துப் போற்றுகிருர் ஞானசம்பந்தர்.

*தோடுடைய செவியன் விடையேறி ஓர்*
*தூவெண் மதிசூடிக்*
*காடுடைய சுடலைப்பொடி பூசி என்*
*உள்ளம் கவர்கள்வன்!* — *சம்பந்தர் தேவாரம்*

வலச்செவி சிவபிரான் கூறு. அதில் அணியப்படுவது கடுக்கன். இடச்செவி சக்தியின் கூறு. அதில் அணியப்படுவதுதான் தோடு, அம்பிகையின் திருத்தோட்டினைப் போற்றுவதன் மூலம் அவளது அளவற்ற கருணையை ஏற்றியுரைத்தார். நம் பிரபுவான ஞானசம்பந்தப் பெருமான்!

சங்கிலியார்க்கு அளித்த உறுதி மொழியை மீறி, சுந்தரர் திருவெற்றியூரை விட்டுப் புறப்பட்டார். திருவெற்றியூர் எல்லை தாண்டியதும் இரண்டு கண்களையும் இழந்தார். பல தலங்களையும் பாடிப் பரவிய சுந்தரர், காஞ்சிபுரத்தை அடைந்த உடனே, காமகோட்டத்தை

வலம்வந்து காமாட்சியம்மையை வணங்கினர். அதன் பின்னரே ஏகம்பவாணன் அடி சூடினர். ஏகம்பவாணன் திருவருளால் முதலில் இடக்கண் பார்வை மட்டுமே கிடைத்தது. இந்த இடக்கண் அம்பிகையின் கண் என்பதை நாம் இங்கே நினைவுகூர்தல் வேண்டும்!

பண்தந்து பாடினல் அம்பிகை நமக்குக் கண்தந்து காக்கின்ருள். அவளை நம்பினல் அதிக வரம் பெறலாம்.

*நம்பினோர் கெடுவதில்லை*
*நான்குமறைத் தீர்ப்பு.*
*அம்பிகையைச் சரண்புகுந்தால்*
*அதிக வரம் பெறலாம்.*

*— மகாகவி பாரதியார்*



# எப்பொழுதும் நன்மை

**கவிஞர் மா. கண்ணப்பன்**

*அம்ச நந்தி* — *ஆதி*

*பல்லவி*

*எப்பொழுதும் நன்மை எல்லோர்க்கும் தருகின்ற*
*கொப்புடையாளைக் கும்பிட வாரீர் (எப்பொழுதும்)*

*ஒப்பிலா எங்கள் கொப்புடையாள் தேரில்*
*அருளுடன் வந்திடும் அழகினைப் பாரீர்! (எப்பொழுதும்)*

*கல்விப்பயிர் வளர்ப்பாள் காரைக்குடி நகரில்*
*செல்வப்பயிர் வளர்ப்பாள் செவ்வாய்த் திருநாளில்*
*தேரேறிவரும் காட்சி தெவிட்டாத அருட்காட்சி*
*தேனாற்றின் பெயர் போலத்தித்திக்கும் அவளாட்சி (எப்பொழுதும்)*

# ஸ்ரீ சனீஸ்வர கவசம்

(சகலவிதமான சனிக்கிரக தோஷங்களும் விலக)

அருட்கவியரசு கு. செ. இராமசாமி எம். ஏ.

திருவளர் பருதி மைந்தன் சிரசினைக் காக்க! சாயை
தருமகன் நெற்றி காக்க! சனைஸ்சரன் கண்கள் காக்க!
கருமலர் புனைவோன் நாசி காக்க! கா சிபன்என் நாவில்
வருமொழி பிழைப டாமல் வாக்கினைக் காக்க! காக்க!

சிவனருட் சீலன், நீலன் செவிப்புலன் காக்க! ஆற்றல்
குவிபுயம், தோள்கள், கைகள் கூற்றுவன் தம்பி காக்க!
கவிமகன் வெள்ளி தோழன் கட்டெழில் மார்பு காக்க!
நவைதொடாக் கைவி ரல்கள் நகங்களை மந்தன் காக்க!

பக்கமும், இடையும், பங்கு பாதனே காக்க! நன்ருய்
உட்குழி வயிற்று வீரன் உதரமே காக்க! உள்ளே
தொக்கபல் வகைஉ றுப்பும் தொழில்களும் இனிது யங்கக்
கட்கம், வில், அம்பு தாங்கும் காக்கைவா கனனே காக்க!

கேட்டையின் கணவன் காமம் கிளர்கரு வழியைக் காக்க!
பூட்டெரு வழி, பின் பாகம் பொலிவுறச் சரிவு காக்க!
நீட்டிய தொடைமு ழங்கால் நிலைபெறக் கிரீடி காக்க!
பாட்டைச்செல் பதங்கள் காக்கைப் பதாகையோன் காக்க! காக்க!

கதிர்மகன், காரி மந்தன், காசிபன், சவுரி, மேற்தோள்,
முதுமகன், பங்கு, நீலன், முடவன், நோய்முகன், ஆயுட்கோள்
விதி, துலாத் துச்சன், கும்ப வீட்டினன், மகர வாசன்,
பதிந்தகே சாதி பாதம் பயன்பெறக் காக்க! காக்க!

கூடிய கூட்டத் தாலும்! கூர்த்தெழும் நோக்கத் தாலும்!
ஒடிய ஓட்டத் தாலும்! உறுதசை ஆட்டத் தாலும்!
வாடிய வாட்டம் தீராய்! வேண்டும்நல் வரங்கள் ஈவாய்!
பாடிய கவசம் கொண்டு பகவனே காவாய்! காவாய்!



# நவக்கிரகங்கள்

தொகுப்பு குறள் இலக்குவன்

உலகில் தோன்றிய உயிர்கள் யாவும் துன்பம் நீங்கிப் பேரின்பம்பெற விரும்புதல் இயற்கை. ஆனல் கலியுகத்தில் ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் இன்பமும் துன்பமும் உடலுக்கு நோயும், உள்ளத்தில் கவலையும் மாறி மாறி வந்த வண்ணம் இருக்கின்றன

இதற்குக் காரணம் இறைவனின் ஒன்பது விதமான அம்சமான நவக்ரஹங்களே ஆகும். கிரகதோசம் என்பதன் பொருள் ஆகும்.

எனவே கிரக தோஷங்களிலிருந்து நிவாரணம்பெற வாரத்தின் 7 நாட்களும் தவருமல் நவக்ரஹங்களை 9 முறை காலை அல்லது மாலை சுற்றி வரவேண்டும். குறிப்பாக சனிக்கிழமையன்று கோயிலுக்குச் சென்று 9 மந்திரங்களையும் சொல்லி வந்தால் நவக்ரஹங்களின் அருளால் அனைத்து நலன்களும் பெருகி மங்களம் உண்டாகும்.

| | | |
|---|---|---|
| புதன் | சுக்கிரன் | சந்திரன் |
| குரு | சூரியன் | செவ்வாய் |
| கேது | சனி | ராகு |

## நவக்கிரகங்களில் ராசிகள் ஆட்சிசெய்யும் காலம்

1] சூரியன் — 1 மாதம்
2] சந்திரன் — $2\frac{1}{4}$ நாள்
3] செவ்வாய் — 45 நாள்
4] புதன் — 1 மாதம்
5] குரு — 1 வருடம்
6] சுக்கிரன் — 1 மாதம்
7] சனி — $2\frac{1}{2}$ வருடம்
8] ராகு — $1\frac{1}{2}$ வருடம்
9] கேது — $1\frac{1}{2}$ வருடம்

# நவக்கிரக வழிபாடு மந்திரம்

கிரக தோஷங்களிலிருந்து நிவாரணம் பெற தினசரி குறிப்பாக சனிக்கிழமை களில் படிக்கவேண்டும். நவக்ரஹங்களை 9 முறை சுற்றி வரும்போது ஒவ்வொரு கிரஹத்தின் முன்பும் சொல்லி துதிக்க வேண்டிய ஒப்பற்ற மந்திரம்.

1] கிரகம் :- **சூரியன்**

மந்திரம் : சீலமாய் வாழ சீரருள் புரியும்
ஞாலம் புகழும் ஞாயிறே போற்றி
சூரியா போற்றி சந்திரா போற்றி
வீரியா போற்றி வினைகள் களைவாய்

பலன் : வீட்டில் செல்வம் பெருகும்.

2] **சந்திரன்**

மந்திரம் : எங்கள் குறைகள் எல்லாந் தீர்க்கும்
திங்களே போற்றி திருவருள் தருவாய்
சந்திரா போற்றி சற்குணா போற்றி
சங்கடந் தீர்ப்பாய் சதுராய் போற்றி

பலன் : நோயற்ற வாழ்வு பெருகும். எல்லா நலன்களும் பெருகும்.

3] **செவ்வாய்**

மந்திரம் : சிறப்புறு மணியே செவ்வாய் தேவே
குறைவிலா தருவாய் குணமுடன் வாழ
மங்கலச் செவ்வாய் மலரடி போற்றி
அங்காரகனே அவதிகள் நீக்கு.

பலன் : எல்லோராலும் வேண்டப்பட்டு சந்தோஷம் பெருகும்.

4] **புதன்**

மந்திரம் : இதயமுறவாழ இன்னல்கள் நீக்கு
புதபகவானே பொன்னடி போற்றி
பதந்தந் தருள்வாய் பண்ணொலியானே
உதவியே யாளும் உத்தமா போற்றி

பலன் : நல்லவற்றை பேசி-நல்லறிவு பெருகும்.

5] **குரு**

மந்திரம் : குணமிகு வியாழக் குணபகவானே
மணமுள வாழ்வு மகிழ்வுனருள்வாய்
பிரகஸ்ப்பதி வியாழப் பரகுரு நேசா
கிரகதோச மின்றி கடாட்சித் தருவாய்

பலன் : செல்வம் பெருகும் துன்பங்கள் மறையும்

சந்திரன் : துர்க்கைக்கு வெள்ளை ஆடை அணிவித்து வெள்ளல்லிமலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் கோதுமை

செவ்வாய்: முருகனுக்கு சிவப்பு ஆடை அணிவித்து சண்பகமலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் துவரை.

புதன் : விஷ்ணுவுக்கு பட்டாடை அணிவித்து வெண் காந்தன் மலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் பச்சைப்பயறு.

குரு : ருத்திரனுக்கு மஞ்சள் ஆடை அணிவித்து முல்லைமலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் கடலை.

சுக்கிரன் : வள்ளியம்மைக்கு மஞ்சள் வெண்பட்டு அணிவித்து வெண்தாமரை மலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் மொச்சை.

சனி : திருமூர்த்திக்கு கருப்புப்பட்டு அணிவித்து கருங்குவளை மலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் எள்.

ராகு : பத்திரகாளியம்மனுக்கு கருப்பு ஆடை அணிவித்து மந்தாமரை மலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் உளுந்து.

கேது : இந்திரனுக்கு பலகலர் ஆடை அணிவித்து செவ்வல்லிமலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் கொள்ளு.

## சனீஸ்வரன் வழிபாடு

1. சனிதோறும் ஒரு பொழுது உணவருந்துதல்
2. காக்கைக்கு அன்னமிடல்
3. எள் அர்ச்சனை செய்தல்
4. கருப்பு உடையணிந்து ஏழைகளுக்கு எள்சாதம் வழங்குதல்.

## சனி பகவான் வழிபாடு

துதிக்க வேண்டிய நாள் : சனிக்கிழமை

நேரம் : மாலை 6 மணிக்கு முன் துதிக்கவும்

தருமசிந்தனையுடனும், வைராக்யத்துடனும் வழிபடுபவர்களுக்கு எல்லா நன்மையும் கிட்டும்.

1) நிலவை போன்று பிரகாசிப்பவனே! சூரிய குமாரனே! யமனுக்கு மூத்தவனே! சாயாதேவி சூர்யன் இவர்களின் புத்திரனே சனீஸ்வரனே! உன் பாதகமலங்கள் சரணம். **என்னைக் காப்பாயாக.**

6] **சுக்கிரன்**

மந்திரம் : சுக்கிர மூர்த்தி சுபசுக மீவாய்
வக்கர மின்றி வரமிகத் தருவாய்
வெள்ளிச் சுக்கிர வித்தக வேந்தே
அள்ளிக் கொடுப்பாய் அடியார்க் கருளே

பலன் : எல்லா நலன்களும் பெருகி நவக்ரஹங்களின் அருளைப் பெறலாம்

7] **சனி**

மந்திரம் : சங்கடந் தீர்க்கும் சனிபகவானே
மங்கலம் பொங்க மனம் வைத்தருள்வாய்
சச்சர வின்றி சனீஸ்வரத் தேவே
இச்செகம் வாழ இன்னருள் தா தா

பலன் : கடன் நீங்கி செல்வம் செழிக்கும்.

8] **ராகு**

மந்திரம் : அரவெனும் இராகு ஐயனே போற்றி
கரவா தருள்வாய் கஷ்டங்கள் நீக்கு
ஆக அருள் புரி அனைத்திலும் வெற்றி
ராகுக் கனியே ரம்மியா போற்றி

பலன் : விரோதிகள் அழிந்து எல்லா காரியங்களும் கிட்டும்

9] **கேது**

மந்திரம் : கேதுத் தேவே கீர்த்தித் திருவே
பாதம் போற்றி பாவம் தீர்ப்பாய்
வாதம் வம்பு வழக்கு களின்றி
கேதுத் தேவே கேண்மையாய் ரட்சி

பலன் : எல்லா துன்பங்களும் நீங்கி சுகவாழ்வு வாழலாம்

## கிரக காலங்களில்

கிரக காலங்களில், கிரக தேவைகளுக்கு கீழ்க்கண்டபடி வண்ணங்களில் ஆடைகள் அணிவித்து மலர் வழிபாடு செய்தல் வேண்டும்.

சூரியன் : சிவனுக்கு சிவப்பு ஆடை அணிவித்து செந்தாமரை மலர் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாட்டு நவதானியம் கோதுமை.

2) அபயமளிப்பவரும் கீழ்நோக்கிய பார்வை உள்ளவரும் எப்பொழுதும் போகத்தை அளிப்பவரும், ஞானநேத்திரம் உள்ளவருமான உம்மை வணங்குகிறேன். **அருள்புரிவீராக.**

3) கருநிறமானவரும், நீண்டசெவியும், சடையும் கொண்ட அகன்ற கண்களை உடையவருமான **உம்மை வணங்குகின்றேன்.**

4) அபயமளிப்பவரும், நீர் கோபமடைந்தால் மனிதர்கள், தேவர்கள், சித்தர்கள், யாராக இருந்தாலும் உமது பார்வையால் அவர்களை அழிப்பவருமான **உமக்கு வணக்கங்கள்.**

5) பிரம்மன், இந்திரன், யமன், அவர்களைக்கூட அழித்துவிடும் பார்வை பெற்றவரே **உமக்கு வணக்கங்கள்.**

6) தனுசு போன்ற மண்டலத்தில் அமந்தவரே **உமக்கு வணக்கங்கள்.**

7) சீரஞ்சீவி மயமான பலன்களை அளிப்பவரே — **உமக்கு வணக்கங்கள்**

8) எப்பொழுதும் மங்களம் அளிப்பவரே — **உமக்கு வணக்கங்கள்**

9) உலகம் பூராவும் துன்பம் நீங்கி, இன்பம் அடையச் செய்பவரே— **உமக்கு வணக்கங்கள்**

நவக்ரஹ தோஷமுள்ளவர்கள்

## செல்ல வேண்டிய கோயில்கள் வழிபட வேண்டிய தெய்வங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரியதோஷம் | — சூரியனார்கோவில் (ஆடுதுறை, தஞ்சாவூரில் உள்ளது) | ஸ்ரீ மன் நாராயணன். |
| 2 | சந்திரதோஷம் | — திருப்பதி | ஸ்ரீ வெங்கடாஜலபதி |
| 3. | செவ்வாய்தோஷம் | — பழனி | ஸ்ரீ பால தண்டாயுத பாணி |
| 4. | புதன் தோஷம் | — மதுரை | ஸ்ரீ சொக்கநாதர் |
| 5. | குருதோஷம் | — திருச்செந்தூர் | ஸ்ரீ பாலசுப்ரமண்யர் |
| 6. | சுக்கிரதோஷம் | — ஸ்ரீ ரங்கம் | ஸ்ரீ ரங்கநாதர் |
| 7. | சனிதோஷம் | — திருநள்ளாறு | ஸ்ரீ சனிபகவான் |
| 8. | ராகு தோஷம் | — காளஹஸ்தி | ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர் |
| 9. | கேது தோஷம் | — காளஹஸ்தி | ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர் |

## நட்சத்திரங்களின் போற்றி மந்திரம்

(தினசரி படித்தால் கிரஹ தோஷத்திற்கு நல்லது)

| | | |
|---|---|---|
| 1 | ஓம் சாம்பவி போற்றி | (அசுவனி) |
| 2 | ,, சடாதரி போற்றி | (பரணி) |
| 3 | ,, சடாஷரி போற்றி | (கிருத்திகை) |
| 4 | ,, சரஸ்வதி போற்றி | (ரோகினி) |
| 5 | ,, லக்ஷ்மி போற்றி | (மிருகசீரிஷம்) |
| 6 | ,, உமையவளே போற்றி | (திருவாதிரை) |
| 7 | ,, சக்தியே போற்றி | (புனர் பூசம்) |
| 8 | ,, கருமாரியே போற்றி | (பூசம்) |
| 9 | ,, அம்பிகையே போற்றி | (ஆயில்யம்) |
| 10 | ,, பராபரையே போற்றி | (மகம்) |
| 11 | ,, பார்வதியே போற்றி | (பூரம்) |
| 12 | ,, மாரித்தாயே போற்றி | (உத்திரம்) |
| 13 | ,, பகவதியே போற்றி | (அஸ்தம்) |
| 14 | ,, மனோன்மணித்தாயோ போற்றி | (சித்திரை) |
| 15 | ,, பைரவி தேவி போற்றி | (சுவாதி) |
| 16 | ,, வாராகியம்மையே போற்றி | (விசாகம்) |
| 17 | ,, பஞ்சாட்சரி போற்றி | (அனுஷம்) |
| 18 | ,, பிரணவத்தி போற்றி | (கேட்டை) |
| 19 | ,, சாம்பிணப் பட்சனி போற்றி | (மூலம்) |
| 20 | ,, அங்காளி பரமேஸ்வரி போற்றி | (பூராடம்) |
| 21 | ,, சங்கரி போற்றி | (உத்திராடம்) |
| 22 | ,, திரிநேத்ரி போற்றி | (திருவோணம்) |
| 23 | ,, கெம்பூரவதி போற்றி | (அவிட்டம்) |
| 24 | ,, வல்லபி போற்றி | (சதயம்) |
| 25 | ,, ஜோதி போற்றி | (பூரட்டாதி) |
| 26 | ,, புவனி போற்றி | (உத்திரட்டாதி) |
| 27 | ,, வாலை போற்றி | (ரேவதி) |



# கோளறு பதிகம்

*திருஞானசம்பந்தர்*

11 பாடல்கள் கொண்ட இந்த கோளறு பதிகத்தை நவக்ரஹத்தின் முன்நின்றோ அல்லது 9 முறை நவக்ரஹங்களை சுற்றி வலம் வரும் பொழுதோ தொடர்ந்து 9 நாட்கள் படித்தால் கிரஹ தோஷங்கள் விலகி நன்மை உண்டாகும்.

வேய்உறு தோளிபங்கன், விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசுஅறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து, என்
உளமே புகுந்த அதனல்
ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி
சனிபாம்பு இரண்டு உடனே
ஆசு அறும், நல்ல நல்ல; அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே 1

என்பொடு கொம்பொடுஆமை, இவை மார்புஇலங்க
எருது ஏறி ஏழையுடனே
பொன் பொதி மத்தமாலை புனல்சூடி வந்துஎன்
உளமே புகுந்த அதனல்
ஒன்பதோடு ஒன்ரேடு எழுபதினெட்டோடு ஆறும்
உடனய நாள்கள் அவைதாம்
அன்பொடும்; நல்லநல்ல; அவை நல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே 2

உருவளர் பவளமேனி ஒளிநீறு அணிந்து
உமையோடு வெள்ளை விடைமேல்
முருகு சுவர்கொன்றை, திங்கள் முடிமேல் அணிந்துஎன்
உளமே புகுந்து அதனல்
திருமகள், கலைஅது ஊர்தி செயமாது, பூமி
திசைதெய்வம் ஆனபலவும்
அருநெறி; நல்லநல்ல; அவைநல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே 3

மதிநுதல் மங்கையோடு, வடபால் இருந்து
மறைஓதும் எங்கள் பரமன்
நதியொடு கொன்றை மாலை முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்து அதனால்
கொதியுறு காலன், அங்கி, நமனோடு தூதர்
கொடுநோய்கள், ஆன பலவும்
அதிகுணம்; நல்ல, நல்ல; அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே 4

நஞ்சு அணி கண்டன், எந்தை மடவாள் தன்னோடு
விடையேறும் எங்கள் பரமன்
துஞ்சுஇருள், வன்னி, கொன்றை முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்து அதனால்
வெஞ்சின அவுணரோடும் உரும் இடியும் மின்னும்
மிகையான பூதம் அவையும்
அஞ்சிடும்; நல்ல, நல்ல; அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 5

வாள் வரிஅதனது ஆடை வரிகோவணத்தர்
மடவாள் தன்னோடு உடனாய்
நாள்மலர் வன்னி, கொன்றை, நதி சூடி வந்து, என்
உளமே புகுந்து அதனால்
கோள் அரி, உழுவையோடு கொலையானை கேழல்
கொடு நாகமோடு, கரடி
ஆள் அரி; நல்ல நல்ல; அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 6

செப்பு இளமுலை நன் மங்கை ஒரு பாகம்ஆக
விடையேறு செல்வன், அடைவு ஆர்
ஒப்பு இளமதியும் அப்பும் முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்
வெப்போடு குளிரும் வாதம், மிகையான பித்தும்
வினையான வந்து நலியா;
அப்படி; நல்ல, நல்ல; அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 7

வேள்படவிழி செய்து அன்று, விடைமேல் இருந்து
மடவாள் தன்னோடும் உடனாய்
வாள்மதி, வன்னி, கொன்றை மலர்சூடி வந்து, என்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழ் இலங்கை அரையான் தன்னோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல்; நல்ல; அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 8

பல பல வேடம் ஆகும் பரன்நாரி பாகன்
பசுஏறும் எங்கள் பரமன்
சலமகளோடு எருக்கு முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனும் மாலும் மறையோடு தேவர்
வருகால ஆன பலவும்
அலைநடல் மேரும்; நல்ல; அவை நல்ல நல்ல
அடியார் அவருக்கு மிகவே. 9

கொத்து அவர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய் வேட விகிர்தன்
மத்தமும் மதியும் நாகம் முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்
புத்தரோடு அமணை வாதில் அழிவிக்கும். அண்ணன்
திருநீறு செம்மைதிடமே
அத்தகு; நல்ல, நல்ல; அவை நல்ல, நல்ல 10
அடியார் அவர்க்கு மிகவே.

தேன்அமர் பொறில்கொள் ஆலை, விளை செந்நெல் துன்னி
வளர் செம்பொன் எங்குத் திகழ
நான்முகன் ஆதி ஆய பிரமாபுரத்து
மறை ஞான ஞான முனிவன்,
தான்உறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் இரை செவ்
ஆன சொல்மாலை ஓதும் அடியார்கள் வானில்
அரசாள்வர்; ஆணை நமதே. 11



## ஸ்ரீ மங்கள சண்டிகா மந்திரம்

நவக்ரஹங்களின் அதிதேவதை ஸ்ரீதுர்க்கையாகும். ஸ்ரீ துர்க்கையின் பிம்பமே ஸ்ரீ மங்கள சண்டிகாதேவியாகும். ஸ்ரீ மங்கள சண்டிகா மந்திரத்தை தினம் 21 முறைகள் ராகுகால வேளையில் சொல்லி 41 நாட்கள் அன்னையை வணங்கினால், சுமங்கலி, பெண்கள், குழந்தை செல்வமும், மாங்கல்ய பலமும் பெறுவர். கிரக தோஷ நிவாரணம் ஏற்படும்.

கன்னிப் பெண்களுக்கு நல்ல இடத்தில் திருமணம் நிகழும்; துன்பமேயில்லாத வாழ்க்கையையும், குறையாத செல்வத்தையும் பெறுவதுடன், திருமங்கள சண்டிகா தேவியின் பேரருளையும் பெறுவர் என்பது சத்தியவாக்கு.

*மங்களே மங்களாதார*
*மாங்கல்யே மங்களப்ரதே!*
*மங்களார்த்தம் மங்களேசி மாங்கல்யம்*
*தேஹிமேசதா!*

# இருளும் அருளும்

டாக்டர். கரு. முத்தய்யா சேவு. அ. கல்லூரி, தேவகோட்டை.

தொட்டிலில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தை, ஒரு நாள் இரவு, திடீரென விழித்து அழத் தொடங்கியது. உடனே, தாய் எழுந்தாள். தொட்டிலை ஆட்டிக் குழந்தையைத் தூங்க வைக்க முயன்றாள். குழந்தை தூங்கவில்லை. தொடர்ந்து அழுதது.

'குழந்தைக்குப் பசியோ' என எண்ணிய தாய், குழந்தையைத் தொட்டியிலிருந்து எடுத்து, பாலூட்டிப் பார்த்தாள். குழந்தை பாலுண்ண மறுத்து, அழுகையை அதிகமாக்கியது.

இப்போது, அழுகை ஒலி கேட்டு, குழந்தையின் தந்தையும் கண் விழித்து விட்டார். 'விளக்கைப் போட்டு, தொட்டிலில் எதுவும் பூச்சி, பொட்டு இருக்கிறதா? எனப் பார்' என மனைவியிடம் கூறினார். மனைவியும் விளக்கைப் போட்டுத் தொட்டிலைச் சோதனையிட்டதோடு, குழந்தையின் உடலிலும், பூச்சி கடித்த அடையாளம் ஏதேனும் இருக்கிறதா எனத் தேடிப் பார்த்தாள். அப்படியும் எதனையும் காணோம். ஆனால் குழந்தையின் அழுகையோ நிற்கவில்லை.

அடுத்து, குழந்தையின் பாட்டி எழுந்தாள். மருமகளை நோக்கி, "குழந்தைக்கு வயிற்று வலியாயிருக்கும். அதற்கு ஏதாவது மருந்து கொடுத்துப் பார்" என்று கூறினாள். மருமகளும் அந்த அடிப்படையில் முயன்று பார்த்தாள். பலன் தான் இல்லை.

ஏறத்தாழ அரை மணி நேரத்திற்கு மேல் தொடர்ந்து குழந்தை அழுது கொண்டிருந்த காரணத்தால் அக்கம் பக்கத்து வீட்டினரும் கண் விழித்து விட்டனர். அவர்களுள் ஒரு வயதானவர் தம் மனைவியிடம் "பாவம், அந்தக் குழந்தை நீண்ட நேரமாக அழுகிறது என்ன? ஏது? என்று நீ வேண்டுமானால் அவர்கள் வீட்டிற்குச் சென்று பார்த்து விட்டு வாயேன்" என்றார்.

வேறொரு வீட்டில் தூக்கம் கலைந்து எழுந்த இளையன் ஒருவன் தன் மனைவியிடம் "என்ன வந்தது இந்தச் சனியனுக்கு வாய் மூடாமல் பேய் மாதிரி அலறி, அனைவர் தூக்கத்தையும் கெடுக்கிறதே?" என்று கூறினான். இதற்கிடையே குழந்தை தானே அழுது களைத்ததாலோ, வயிற்று வலி தீர்ந்ததாலோ உறங்கி விட்டது.

குழந்தை அழும் பொழுது, அது குறித்து, தாய், தந்தை, பாட்டி முதலியோர் கவலைப்பட்டது இயல்பே. ஏனெனில், அழுவது அவர்கள் வீட்டுக் குழந்தை. அந்தத் தொடர்பு காரணமாக அதனிடம் அவர்களுக்குப் பரிவுணர்ச்சி ஏற்படுகிறது. இவ்வாறு தொடர்புடையோரிடம் தோன்றும் பரிவைத்தான் 'அன்பு' என்கிறோம்.

ஆனால், பக்கத்து வீட்டுப் பெரியவரும், பரிவு காட்டினாரே? அது ஏன்? அவருக்கு நேரடியாக அக்குழந்தையோடு எத் தொடர்பும் இல்லையே? இவ்வாறு தொடர்பற்றோரிடம் காட்டப் பெறும் பரிவைத்தான் 'அருள்' என்கிறோம்.

இந்த அருளுக்கு அடிப்படையாக அமைவது அன்புதான். எடுத்துக் காட்டாக, சில வீடுகளில், இதுபோல இரவில் குழந்தை அழும்போது, கடைசியாகக் காட்டப்பட்ட பக்கத்து வீட்டு

இளைஞன் பேசும் பேச்சினைக் குழந்தையின் தந்தையே பேசுவது உண்டு. தன் தூக்கம் கலைந்த எரிச்சலில், அழுவது தன் குழந்தை என்பதையும், மறந்து, அதனைச் ' சனியன் ' ' பேய் ' என ஒரு தந்தை பேசினால் அவன் மனத்தில் ' அன்பு ' இல்லை என்பது தானே பொருள். தன் குழந்தையின் அழுகை பற்றியே, இப்படிப் பேசும் அத்தந்தை, அக்கம் பக்கத்து வீட்டுக் குழந்தை அழுதால் பரிவா காட்டுவான்? சண்டைக்குப் போகாமல் இருந்தால் போதாதா?

ஆக அன்பை அடிப்படையாகக் கொண்டு, உருவாவதே அருள் என்பது இப்போது தெளிவு. இதனைத் தான் வள்ளுவர், '' அருளென்னும் அன்பீன் குழவி '' என்கிறார். '' அருள் '' குழந்தை என்றால், அதனைப் பெற்ற தாய் '' அன்பு '' என வள்ளுவர் குறிக்கிறார்.

இரத்த உறவுடையோர் பால் எழும் இயல்பான பரிவு அன்பு. நட்பு, பழக்கம் போன்ற தொடர்புடையோர் பாலும் அதே பரிவு ஏற்பட்டால் அது வளர்ச்சியடைந்த அன்பின் உச்சநிலை எத்தொடர்பும் இல்லாத மனிதர்களிடம் பரிவு பிறந்தால் அன்பு வளர்ந்து கனிந்து அருள் தோன்றுகிறது எனலாம். மனித உயிரையும் தாண்டி; விலங்குகள், பறவைகள், புழு, பூச்சி முதலியவற்றின் பாலும் பரிவு ஏற்பட்டரல் அருள் வளர்ந்துள்ளது என அறியலாம். இவ்வாறான, இயங்கும் உயிர்களையும் கடந்து, நிலையுயிர்களான பயிர்களிடத்தும் பரிவு ஏற்பட்டு, ''வாடுகிற பயிரைக் காணும் போதெல்லாம் வாடுகிற'' மனநிலை ஏற்பட்டால், அதுதான் அருளின் உச்சம். அந்த அளவு அருளுள்ளம் கொண்டவர் ' வள்ளலார் ' எனப் புகழப்படுவார்.

இவ்வாறு அருள் நிறைந்த உள்ளம் ஒளி வெள்ளம் பரவிய உள்ளம் ஆகும். இந்த அருள் அணுகாத உள்ளம் இருள் நிறைந்த உள்ளம். ஆம். அந்த உள்ளத்தில் தன்னல இருளும், பழியுணர்ச்சி, பகையுணர்ச்சி ஆகிய இருளும் நிறைந்திருக்கும். எனவே, அருளில்லார் செல்லும் இடங்களும், இருள் நிறைந்த இடங்களாகி விடுவது இயற்கை. இவ்வுலகிலேயே, அவர்கள் செல்லும் இடங்களை ' இருள் ' நிறைந்த இடங்களாக்குவரெனின், ' அவ்வுலகி'ல் அவர்கள் எங்கே செல்வர்? ஒளி மிகுந்த இடமென நம்பப்பெறும் சொர்க்கத்திற்கா செல்வர்? அருள் உள்ளம் நிறைந்த ' வள்ளலார் ' சோதியை வழிபட்டார். சோதியோடு கலந்தார். அருளுள்ளம் இல்லாதோர் இருள் நிறைந்த நரகம் செல்வர் என்பதே உலக நம்பிக்கை. இதனையே வள்ளுவர்,

*'' அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த*
*இன்னா உலகம் புகல்'' என்கிறார்.*

எனவே, 'அவ்வுலகம்' பெறுவதற்கும், இவ்வுலகில் சிறப்பெய்துவதற்கும் அடிப்படையாக அருள் பழுத்த நெஞ்சினை அடைதல் வேண்டும் என அறிகிறோம். அவ்வாறாயின், அதனை அடைதல் எவ்வாறு? நிலவு எங்ஙனம் ஒளி தருகிறது? கதிரவனிடம் பெற்ற ஒளியைத் தான் நிலவு புவி மீது பொழிகிறது. இந்த உவமையைச் சற்றுத் திருப்பிப் பார்க்கலாம். தான் பெறும் ஒளியைப் புவி மீது பொழியப் போகிறது நிலவு என்பதனால் தான், கதிரவன் நிலவின் மீது ஒளி பாய்ச்சுகிறான் எனலாமே.

அதுபோல, பிற உயிர்கள் மீது அருள் செலுத்தும், பக்குவநிலையைத் தொடும் பொருட்டு, வளரும் உள்ளங்கள் மீது, இறைவன் அருள் பொழிவான். அவனது அருளாகிய ஒளி நம் மீது பட்டால்தான், நம் உள்ளம் இருள் நீங்கி, அருள் ஒளியை வளர்த்துக் கொள்ள இயலும். '' அவனருளால் அவன் தாள் வணங்கி '' என்பார் மணிவாசகர்.

இறைவன் தாளினை வணங்கவே அவன் அருள் வேண்டுமெனின், பிற உயிர் மீது அருள் செலுத்தும் பக்குவ நிலையைப் பெறவும், அவன் அருள் இன்றியமையாத தல்லவா? ஆனால் அவன் அருளைப் பெற நாம் முயன்றால் தான், அது கிட்டும். அந்த முயற்சியின் பல்வேறு படிநிலைகளே, இறைவனை வணங்குவது, வழிபடுவது, திருக்கோயில்கட்குச் செல்வது, திருவிழாக்களில் பங்கேற்பது, குடமுழுக்கு விழாக்களைக் காண்பது, கோயில், விழா, குடமுழுக்கு முதலியவற்றை நிருவகித்து நடத்துவது ஆகியவை.

இம்முயற்சிகளை மனத்தில் மாசு இல்லாமல் செய்யும் மனிதர்களை, 'இவர்கள் தன் அருளுக்குத் தகுதியானவர்கள்' என இறைவன் தேர்ந்தெடுப்பான்; கதிரவன் நிலவைத் தேர்ந்தெடுத்தது போல. ஆனால் மனிதரிற் பலர் மேலே கூறப்பட்ட செயல்களை வெறும் சமயச் சடங்குகளாகக் கைக் கொண்டு, மனத்தில் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் பேசும் தன்மை ஆகிய மாசுகளோடு, இச்சடங்குகளைப் போர்வையாகப் பயன்படுத்துகின்றனர். இவர்கள் அருளாளர்களாக உருவாக இயலாது.

உண்மையில் தன்னலம் மறந்து, தியாக உள்ளம் வளர வேண்டும் என்ற அடிப்படையில் தான், இறைவன் பெயரால் நோன்பு முதலியவற்றைச் சமயங்கள் அமைத்துள்ளன. இறைவனுக்காக என்று தன்னலத்தைத் துறக்க முன் வரும் மனிதன், படிப்படியாக வளர்ந்து, தொடர்புடையோருக்காக, தொடர்பற்ற மனிதருக்காக, பிற எவ்வுயிர்க்காகவும் கூடத் தன்னலம் துறக்கும் பேரருள் என்னும் ஒளிப் பிழம்பைத் தன் உள்ளமாக அடைகிறான். எனவே, அவன் இவ்வுலகிலும், அவ்வுலகிலும் செல்லுமிடத்தையெல்லாம் இருளற்ற, ஒளிநிறைந்த இடமாக மாற்றுகிறான். அத்தகைய அருளாளராக வளரும் முயற்சியை நாம் அனைவரும் மேற்கொள்வோமாக.



## ஆலயத்தில் செய்யத்தகாதவை

1. வேகமாக வலம் வரக்கூடாது.
2. முடிந்தவரை வெறும் பேச்சும் பேசக்கூடாது
3. கைலி அணிந்து உள்ளே செல்லக்கூடாது
4. வெற்றிலைப் போட்டுக்கொண்டு உள்ளே செல்லக்கூடாது
5. போர்த்திக்கொண்டு செல்லக் கூடாது
   மேல்துண்டை இடுப்பில் கட்டவேண்டும்
6. மூர்த்திகளைத் தொடக்கூடாது. அருல் கற்பூரம் ஏற்றக்கூடாது.
7. உள்ளே அசுத்தம் செய்யக்கூடாது
8. அடுத்தவருக்கு இடையூறு இல்லாமல் ஆண்டவன் திருநாமங்களை
   மனதிற்குள் வழிபாடு செய்தல் வேண்டும்.

# அறுவகைச் சமயங்கள்

டாக்டர் இரா. செல்வக்கணபதி, எம். ஏ., பிஎச். டி., பி. எட்., தருமபுரம்.

## முன்னுரை :

இந்தியத் தத்துவ வரலாற்றில், ஏறத்தாழ 2500 ஆண்டுக் காலத்தில் தோன்றி மறைந்த சமயங்கள் அல்லது மதங்கள் பல அவற்றுள் இன்றும் நிலவுவன சில. பெயரளவில் நிற்பன சில. தோன்றிய மண்ணில் நிறைபெறமாட்டாது வெளி நாடுகளில் சென்று வளர்ச்சி பெற்றன சில. இத்தகைய மதங்கள் பலவாயினும் இவற்றைத் தத்துவச் சிந்தனையாளர்கள் புறச்சமயங்கள் என்றும், அகச்சமயங்கள் என்றும் இருபெரும் கூறுகளாகப் பகுத்துக் கொண்டு ஆராய்ந்துள்ளனர். சிவஞான சுவாமிகள் புறச்சமயங்களை இருகூறாகவும், அகச்சமயங்களை இருகூறாகவும், பகுத்துக் கொண்டு நாற்கூற்று அறுவகைச் சமயங்களாக இருபத்துநான்கு சமயங்களை ஆய்வுக்குட்படித்தியுள்ளார். அவையாவன : புறப்புறச் சமயங்கள் ஆறு : புறச்சமயங்கள் ஆறு : அகப்புறச் சமயங்கள் ஆறு : அகச்சமயங்கள் : ஆறு இவ்விருபத்துநான்கு சமயங்களும் பேலானதாய் விளங்குவதையே சித்தாந்த சைவம் என்றும் 'சைவ சித்தாந்தம்' என்றும் குறிக்கின்றனர்.

## பகுப்பின் காரணம் :

சமயத்துறையில், இந்தியத் தொன் நூல்களுள் காலப்பழமையுடையன வேதங்கள், வேதங்களும், இவற்றின் வழிப்பட்ட ஆகமங்களும் இறைவன் கருணையால் அருளிச் செய்யப் பெற்ற முதன் நூல்கள். 'வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்' என்று திருமூலரும், 'அருமறை ஆகமம் முதல் நூல்' என்று அருணந்தி சிவாச்சாரியரும் இதனை உறுதி செய்வர். வேத, சிவா சமயங்களை மையமாகக் கொண்டு எழுந்தனவே அகப்-புறச் சமயங்கள் என்ற பகுப்புக்கள். வேதம், சிவாகமம் என்ற முதனூல்களுள் ஒன்றையும் உடன்படாது. இவற்றிற்கு மாறாக எதிர் நூல் செய்து கொண்டார் பெரிதும் புறமாதல் பற்றி, அவர் மேற்கொண்டொழுகிய சமயங்கள் புறப்புறச் சமயங்கள் என்று அழைக்கப் பெற்றன. வேறு சில சமயங்கள் வேதத்தை மட்டும் ஏற்றன. சிவாகமத்தை ஏற்றில : இவை புறச் சமயங்கள் எனப் பெற்றன. மூன்றாவதாக வேத சிவாகமங்களைப் பொதுவாக ஏற்றுக் கொண்ட சில சமயங்கள். இவற்றை அன்றி வேறுசில நூல்களைச் சிறப்பாகப் போற்றி நின்றன. இவை அகபுறச் சமயங்கள் எனச் சுட்டப்பெற்றன. நான்காவதாக, சில சமயங்கள் வேத சிவாகமங்களைத்தாமும் சிறப்பாக ஏற்ற போதிலும், ஆசாரியன் அருளின்மையின் அவற்றின் உண்மைப் பொருள் காணமாட்டாது தத்தமக்குத் தோன்றியவாறே பொருள் உரைத்து நின்றன இவை அகச்சமயங்கள் எனக் குறிக்கப்பெற்றன.

## புறப்புறச் சமயங்கள் :

புறப்புறச் சமயங்கள் ஆறாவன : 1 உலகாயதம். 2-5 நால்வகைப் பௌத்தம், 6 சமணம் (அல்லது) ஆருகதம். இவற்றுள் நால்வகைப் பௌத்தம் என்பன, 1. மாத்தியமிகம். 2. யோகாசாரம். 3. வைபாடிகம். 4. சௌத்திராந்திகம் அருணந்திசிவம், சிவஞானசித்தியார் பரபக்கத்தில் சமணத்தை இரண்டாகப் பிரித்து எடுத்துரைத்து மறுத்துள்ளார். அவை 1. நிகண்டவாதம் 2. ஆசீவகம்.

### புறச் சமயங்கள் :

புறச்சமயங்கள் ஆறாவன : 1. தருக்கம், 2. மீமாஞ்சை, 3. ஏகான்ம வாதம், 4. சாங்கியம், 5. யோகம், 6. பாஞ்சராத்திரம், என்பன ஆறாவதாகிய பாஞ்சராத்திரம் 'வைணவம்' எனவும் வழங்கப்பெறும். யோகமதம் பதஞ்சலி முனிவரால் தோற்றுவிக்கப்பட்டமையின் 'பதஞ்சல மதம்' என்றும் வழங்கப்பெறும். தருக்கம், வைசேடிகம், நையாயிகம் என இரு வகைப்படும். மீமாஞ்சை 'பட்டாசாரிய மதம், 'பிரபாகரமதம்' என இரு பிரிவுகளையுடையது. பூர்வ மீமாஞ்சைக்கு ஜைமினி முனிவர் செய்வ நூல் ஒன்று உண்டு, அதற்கு உரை கண்டார் பெயரில் இருபிரிவுகள் தோன்றின இவை. 'பட்டம்' 'பிரபாகரம்' என்றும் வழங்கும், மூன்றாவதாகிய ஏகான்மவாதத்தில் 1. சத்தப்பிரமவாதம், 2. மாயாவாதம், 3. பரிணாமவாதம், 4. கிரீடாப்பிரமவாதம் என்ற நான்கு பிரிவுகள் உண்டு. பரிணாமவாதம் 'பாற்கரியமதம்' என்றும் கூறப்படும். சாங்கியத்தை அருணந்திசிவம் நிரீச்சுரசாங்கியம் எனக் குறிப்பர்.

### அகப்புறச் சமயங்கள் :

1. பாசுபதம் 2. மாவிரதம், 3. காளாமுகம், 4. வாமம், 5. வைரவம் 6. ஐக்கியவாத சைவம் என்ற ஆறும் அகப்புறச் சமயங்கள்.

### அகச் சமயங்கள் :

1, பாடாணவாத சைவம், 2. பேதவாத சைவம், 3. சிவசமவாத சைவம், 4. சிவசங்கிராந்த வாத சைவம், 5. ஈசுவர அவிகாரவாத சைவம், 6. நிமித்தகாரண பரிணாமவாத சைவம் என்ற ஆறும் அகச்சமயங்கள் என்று வழங்கப் பெறுகின்றன.

### கண்டனங்கள் :

சைவசித்தாந்த சாத்திரங்களும், சாத்திர உரைகளும் மேற்குறித்த அகப் புறச்சமயங்களுள் பலவற்றை, அவற்றின் கொள்கைகளை எடுத்துக் காட்டி- சைவசித்தாந்த நெறி நின்றி மறுத்துரைக்கின்றன. இவற்றுள் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க சாத்திர நூல்கள் இரண்டு. ஒன்று அருணந்தி சிவாசாரியாரின் சிவஞானசித்தியார் பரபக்கம், மற்றொன்று உமாபதி சிவாசாரியரின் சங்கற்ப நிராகரணம், இவற்றுள் சிவஞானசித்தியார் பரபக்கம், உலகாயதம், நால்வகைப் பௌத்தம், இருவகைச் சமணம் ஆகிய புறப்புறச் சமயங்களையும் 1. பட்டாசாரிய மதம், 2. பிரபாகரமதம், 3. சத்தப்பிரமவாதம், 4. மாயாவாதம், 5. பாற்கரியமதம், 6. நிரீச்சுர சாங்கியம், 7. பாஞ்சாரத்திரம் ஆகிய புறச் சமயங்களையும், விரித்துரைத்து உரிய மறுப்புரை வழங்குகின்றது. புறச்சமயங்களுள் தருக்கமதம், யோகமதம், ஏகான்மவாதங்களில் ஒன்றாகிய கிரீடாப் பிரமவாதம் என்பன பரபக்கத்தால் மறுத்துரைக்கப் படவில்லை. இவற்றுள் மாறுபட்ட கொள்கைகள் அதிகம் இல்லாமை பற்றியே இவற்றிற்குத் தனியே மறுப்புரைக்கப் படவில்லை என ஆய்வாளர்கள் கூறுகின்றனர். சித்தியாரில் பாஞ்சராத்திரம் மட்டும் தத்துவ முறையாலன்றி, புராண முறையால் மறுக்கப்பட்டுள்ளது. அகச் சமயங்கள் ஆறும் சங்கற்பநிராகரணத்தால் மறுக்கப் பெற்றன. அகப்புறச் சமயங்களில் தத்துவச் கொள்கைகள் மிகுதியாக இன்மையின் அவை தனியே சைவசித்தாந்த நூல்களுள் எடுத்துரைத்து மறுக்கப் பெறவில்லை. சிவஞானமுனிவர் சிவஞான மாபாடிய, அவையடக்கப் பேருரையில், அகப்புறச்சமயக் கருத்துக்களைப் பரபக்கத்துக்குச் சிறிதே வேறுபட எடுத்துரைத்து மறுத்துள்ளார்.

இனி, மேற்குறித்த நாற்கூற்று அறுவகைச் சமயங்களின் திறம்பற்றிச் சுருக்கமாகக் காணலாம். குறிப்பாக இவற்றைத் தோற்றியோர், நூல், உட்பிரிவுகள், இன்றியமையாக் கொள்கைகள் என்பன மட்டும் இங்கே தரப்பெறுகின்றன.

**உலகாயதம் :**

உலகாயதம் 'நாத்திகம்' என்றும் வழங்கப்பெறும் உலகாயத்திற்கு தேவகுருவாகிய வியாழன் முதல் நூல் செய்தார் எனக் கந்தபுராணத்தில் குறிக்கப் பட்டுள்ளது. உலகம் மட்டுமே உள்ள பொருள் எனக் கொண்டமையால் இம்மதம் உலகாயதம் எனப்பட்டது. சர்லாகர் என்ற தத்துவஞானியால் முதல் முதல் உலகாயதக் கொள்கை நிறுவப்பட்டதால் இதனைச் சர்வாகம் என்றும் கூறுவர். உலகாயதர் உலகமும், நமது உடம்பும் மட்டுமே மெய். உயிரும் இறைவனும் பொய் என்றனர். மூவகை அளவைகளில் 'காட்சி அளவை' ஒன்றை மட்டுமே இவர்கள் உடன்பட்டனர். ஆகம அளவையை ஏற்றிலர். ஆகாயம் என்ற பூதத்தை ஏற்றிலர். எஞ்சிய நான்கு பூதங்களே உள்ளன; இவற்றின் சேர்க்கையே உலகும், உடலும், உயிரும், உடலும் கூடியிருக்கும் போதே இன்பத்தை நுகர்ந்து கொள்ள வேண்டும். வினை, இம்மை, மறுமை, சுவர்க்கம், நரகம் என்பன யாவும் கற்பனை என்பன உலகாயதர் கொள்கை. இவ்வுலகாயத மதம், தூலதேகான்ம வாதம், சூக்கும தேகான்மவாதம், இந்திரியான்மவாதம், அந்தக்கரணான்மவாதம், பிரணான்ம வாதம், சமுதாய வாதம் எனப் பல திறப்படும். சித்தியார் பரபக்கத்தில் உலகாயதர் கொள்கை 21 விருத்தங்களாலும் மறுப்பு 31 விருத்தங்களாலும், விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

**பௌத்தர் :**

புத்தரால் தோற்றுவிக்கப் பெற்ற மதம் பௌத்தம் எனப்பட்டது. 'புத்தன்' என்ற சொல்லுக்கு நிறைஞானி என்பது பொருள் இத்தகு நிறைஞானியாக விளங்கி, 'மாபாதகங்கள் சிறிதும் இலராய்க்கருணை உருவாக வாழ்ந்தவர் 'ஆதிபுத்தர்' என்று கூறுவர். அவர் இயற்றிய வேத நூலே 'பிடகம்' எனப்படும். எல்லாப் பொருகளும் கணந்தோறும் தோன்றிய அழியும். அளவைகள் காட்சி, கருதல் இரண்டு மட்டுமே. அறிவும், அறியப்படும் பொருளும் உண்டேயன்றி, அறிவை உடையவன் என்று ஒருவன் இல்லை. பல பொருள் கூட்டமே 'கந்தம்' என ஒரு பொருளாய்த் தோன்றும் அஃது உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, வி ஞானம் என ஐந்து வகைப்படும். ஞானத்தில் என தோன்றிய வாசனை அழிவதே முத்தி. ஞானம் கூடக்கெடுத்தல் முத்தி என்றும் கூறப்படும். பௌத்த கணபங்க வாதம் என்றும் கூறப்படும் ஆதிபுத்தராகிய மாத்தியமிகர் முதலியோரால் நிறுவப்பட்ட மதங்களை அனுட்டிப்போர் நால்வகைப் பௌத்தரா வார்கள்.

**சௌத்திராந்திகம் :**

நால்வகைப் பௌத்தத்தில் சௌத்திராந்திகமே தலையாயது. இதுவும் வைபாடிகமும் ஹீனயான பௌத்தம் என வழங்கப்படுகின்றன. ஹீனயானம் என்பதற்குச் சிறிய குறைவுடைய அல்லது தாழ்ந்த வழிஎன்பது பொருள். சௌத்திராந்திகத்தை உருவாக்கியவர் குமாரலப்தர் என்பர். ஸ்வலட்சணங்கள் தாம் நம் கண்ணிலே படுவன. இவற்றைக் காண்டலில் மனத்தின் பங்கு அதிகம் ஸ்வலட்சணத்தைக் கூட நாம் அனுமானத்தாலேயே உணர்கின்றோம். நம் காட்சிக்கு ஏதுவாகிய ஸ்வலட்ணம் உண்மையில் காட்சி நிகழும் கணத்தே புறத்தில் இல்லை. ஒவ்வொரு ஸ்வலட்சணமும் மறைந்த பின்பே அது இருந்தது என்பதை உணர்கிறோம் இவற்றுக்கு காரணம் புறம் அகம் என்னும் இருவகைச் சமுதாயங்கள் புறச்சமுதாயம் நிலம் முதலியன. அகச் சமுதாயம் சித்தமும் சித்தப்பகுதியும். அவற்றிற்குக் காரணம் முற்குறித்த ஐவகைக் கந்தங்கள். கந்தம் என்பது

சமூகம். உலகம் முழுவதும் இவ்விருவகைச் சமுதாயங்களுள் அடங்கும் இவற்றிற்கு வேறாய் ஆன்மா இல்லை. இவைகளே பந்த துக்கமாவன ஐவகைக் கந்தங்களும் அறக்கெடுவதே முத்தி என்பன சௌத்திராந்திகர் கொள்கை. பரபக்கத்தில் இம்மதம் 31 விருத்தங்களாலும் மறுப்பு 40 விருத்தங்களாலும் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

## யோகாசாரம் :

யோகாசாரத்திற்கு உருக்கொடுத்தோர் தின்னாகரும், தரும கீர்த்தியும் ஆவர். இவர்களே வைபாடிகத்தையும் தோற்றினர் என்பர். புறப்பொருள் யாவும் சூனியம். ஞானம் ஒன்றே உள்ளது அதுசாகாரம், நிராகாரம் என இருவகைப்படும். பொருள், வடிவம், நிறம் முதலியனபற்றி அகத்தே தோன்றும் ஞானம் சாகாரம் 'பந்தம்' நீங்கியவழி வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் எழுதுவது நிராகாரம். இத்தன்மைத்தாகிய ஞானமே அன்றிப் பொருளென வேறில்லை என்பன யோகசாரமதம், ஆசாரியன் கூற்றை உடன் படல் பௌத்தததில் 'ஆசாரம்' என்றும் அதற்கு மேல் வினாதலை 'யோகம்' என்றும் குறிப்பர் இவ்விரண்டானும் பெற்ற பெயரே யோகாசாரம் என்பது. பரபக்கம் ஒரு விருதத்தால் இம்மதக் கொள்கையைக் கூறி இரு விருத்தங்களால் மறுக்கின்றது.

## மாத்தியமிகம் :

மாத்தியமிகத்தை உருவாக்கியவர் கி. பி. 2 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த ஆரிய தேவரும், நாகார்ச்சுனரும் ஆவர். மாத்தியமிகமும் யோகாசாரமும் (விஞ்ஞானவாதமும்) மகாயான பௌத்தம் என்றும் வழங்கப்படும். இதற்கு பெரிய அல்லது உயர்ந்தவழி என்பது பொருள். எல்லாப்பொருளும் சூனியமே. அவை மயக்கத்தால் காட்சிப் பொருள்போலத் தோன்றுகின்றன உலகத்துப்பொருள்கள் உள்பொருள்களாயின் அழியா; இல்பொருள்களாயின் தோன்றா; உள்ளவும், இல்லவும் எனின் முரண்படும்; இரண்டும் அல்ல எனின் உணர்ச்சிதாரா எனவே இந் நான்கு பகுதியும் இல்லை. எதைப்பற்றியும் எதுவும் சொல்லமுடியாது என்பன இவர்கள் கொள்கை பிடக நூற்பொருளை உணர்ந்து, மேல் வினாவாது நிற்றலின் இக்கொள்கை மாத்தியமிகம் எனப்பட்டது. மத்தியம் நிலையுடைமையின் மாத்தியமிகமாயிற்று என்பர். பரபக்கத்தில் இக்கொள்கை ஒரு விருத்தத்தாலும், மறுப்பு இரு விருத்தங்களாலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

## வைபாடிகம் :

புறப்பொருள்கள் ஞானத்தால் அனுமானித்து அறியப்படுவன அன்று அவை காட்சிப் பொருளே புறத்பொருள் அளவையின் வழி உணரப்படும் என ஆசிரியன் உணர்த்த அதனை மாணவன் உடன்படாது. ஞானம் தமக்கு காட்சிப் பொருளாக்லானும். காட்சிப் பொருள் ஒன்றுமின்றாயின் நியதனமான உடனிகழ்ச்சி உணர்ச்சிக்கு இடமின்மையால் வழியளவை நிகழாது ஆகலானும் இது மாறுகோள் உரை என்றான். அதனால் வந்து பெயர் வைபாடிகம் என்பது விபாடை-மாறுகோள் உரை. பரபக்கத்துள் ஒவ்வோர் பாடலால் இம்மதக்கொள்கையும், மறுப்பும் விரித்துரைக்கப் பெற்றுள்ளன,

## சமணர் அல்லது ஆருகதர் :

சமண சமயத்திற்கு, ஜைனமதம், ஆருகதமதம், நீகண்டமதம், அநேகாந்தவாதமதம். ஸியாத்வாதமதம் என்னும் பல பெயர்கள் உண்டு. சமணம் என்ற சொல்லுக்குத் துறவு என்பது பொருள். ஜினர் என்றால் புலன்களையும், கர்மங்களையும் ஜயித்தவர் என்று பொருள் உண்டு.

ஜினரைக் கடவுளராகக் கொண்டதால், இம்மதம் ஜைனம் ஆயிற்று. சமணக் கடவுளுக்கு அருகன் என்றும் பெயர் கூறுவர். சமணக் கொள்கைகளைப் பரப்பவந்த அருளாளர்கள், இம்மதத்தில் தீர்த்தங்கரர்கள் என்பபடுவர். இதுவரை 24 தீர்த்தங்கரர்கள் தோன்றியுள்ளனர். முதல் தீர்த்தங்கரராகிய ரிஷபதேவர் சமணத்தை முதல் முதல் உலகில் பரப்பவந்த என்பர். சிலர் 23 ஆவது தீர்த்தங்கரராகிய பார்சுவநாதரே சமணமதத்தை உண்டாக்கினார் என்றும், இவருக்கு அடுத்துவந்த வர்த்தமான மகாவீரரே இந்த மதத்தைச் சீர்திருத்தி அமைத்தார் என்றும் கூறுவர். சமண சமயத்தத்துவத்தில் நவபதார்த்தம் எனப்படும் ஒன்பது பொருள்கள் கூறப்படுகின்றன. அவை; உயிர், உயிரல்லது, புண்ணியம், பாவம், ஊற்று, செறிப்பு, உதிர்ப்பு, கட்டு, வீடு என்பன. இம்மதத்திற்கு நூல் ஜினக்கடவுள் செய்த பரமாகமம் என்பர்.

சமண சமய தத்துவநூல்களில் கடவுளைப்பற்றிக் கூறப்படவில்லை. பந்தத்னின்றும் விடுபட்டு மோட்சநிலை அடைந்த உயிரே கடவுள் என்பது சமணர் கொள்கை. மேற்கூறிய ஒன்பது பொருள்களின் உண்மையை அறிந்து கொள்வது நன்ஞானம். இவற்றின் தன்மையை ஐயப்பாடின்றி உணர்ந்து கொள்வது நற்காட்சி, நன்ஞானம், நற்காட்சி, இரண்டையும் ஒரு தன்மைத்தாக மனத்திற்கொண்டு ஒழுகுவது நல்லொழுக்கம் எனப்படும். இதனை, இரத்தினதிரயம் எனக்கூறுவர். சித்தியார் பரபக்கத்தில் நிகண்டவாதம் எட்டுப் பாடல்களால் எடுத்துரைக்கப்பட்டு, பதினான்கு பாடல்களால் மறுக்கப்படுகிறது. ஆசீவகம் பத்துப் பாடல்களால் விரிக்கப்பட்டு ஆறு பாடல்களால் மறுக்கப்படுகிறது.

### புறச்சமயங்கள் : தருக்கர் :

தருக்கமதம் வைசேடிகம், நையாயிகம் என இருவகைப்படும். இவற்றிற்கு முதல் நூல்கள் காணப்படாவிடினும், வேறுபல நூல்கள் வடமொழியில் உள்ளன. பூர்வ மீமாஞ்சைக்கு ஜைமினி முனிவர் செய்த நூல் ஒன்று உண்டு. அதற்கு உரை வரைந்தார் இருவர். பின்னர் அம்மதம், பாட்டம், பிரபாகரம் என இரண்டாகப் பிரிந்தது. தருக்கம் என்பது பொருள்களை அளந்தறிதல். அவை திரவியம், குணம், கருமம், சாமான்யம், விசேடம், சமவாயம், அபாவம், என ஏழுவகைப்படும். பதார்த்தங்களைப் பொருளுண்மைக்கு அளந்து கூறுதர், காட்சி அல்லது பிரத்யட்சம். அனுமானம், ஆகமம், அபாவம், அருத்தாபத்தி, உபமானம், என அறுவிதம் என்ப சிலர். பாசேடம், சம்பவம், ஐதிகம், இயல்பு என நான்கையுமியைத்துக் கூறுவர் சிலர்.

### மீமாஞ்சை :

மீமாஞ்சை என்ற சொல்லுக்கு விசாரித்தல் அல்லது விசாரம் என்பது பொருள். இது வேதத்தை முழுமுதற் பிராமணமாக ஏற்பது. வேதம் இரு பிரிவுகளை உடையது. முதற்பிரிவு பிராமணங்கள் எனப்படும். இரண்டாம் பிரிவு உபநிடதங்கள் எனப்படும். மீமாஞ்சை முதற்பிரிவாகிய பிராமணங்களை ஆதாரமாக கொண்டு எழுந்ததே 'வேதாந்தம்' என்பது ஆயினும் வேதாந்தம். மீமாஞ்சை ஆகிய இரண்டையுமே மீமாஞ்சை என்று கூறுதல் உண்டு. இதனை வேறுபடுத்த முன்னதைப் பூர்வ மீமாஞ்சை எனவும், பின்னதை உத்தர மீமாஞ்சை எனவும் வழங்கினர். பிற் காலத்தில் மீமாஞ்சை என்ற சொல் பூர்வமீமஞ்ாசையை மட்டுமே குறித்து வழங்கலாயிற்று. இம் மதம் பற்றிய நூல்களுள் மிகப்பழையது கல்பசூத்திரம் என்பது. மிக முக்கியமானது ஜைமினி முனிவர் இயற்றிய மீமாம் சூத்திரம் என்பது. மீமாஞ்சை கருமத்தை உடன்படுகிறது. கடவுளை உடன்படுதல் இல்லை. ஆகையால் கருமமே கருத்தா என்று இம்மதம் கூறுகின்றது.

### ஏகான்மவாதம் :

கருமகாண்டத்தை உடன்பட்டு எழுந்த மீமாஞ்சையை மறுத்து ஞான காண்டத்தை வற்புறுத்தி வேதவியாசர் செய்த நூல் உத்தர மீமாஞ்சை எனப்படும் பிரமசூத்திரம். இதன் வழியே

ஏகான்மவாதம் உருவாயிற்று. இதனையே அத்வைதம் என்றும், வேதாந்தம் என்றும் கூறுவர். இதே பிரமசூத்திரத்திலிருந்தே, சிவாத்துவித சைவம், விசிட்டாத்துவிதம் (த்வைதமதம்) துவிதமதம் (மத்துவமதம்) ஆகியனவும் தோன்றின. சங்கரரே ஏகான்மவாதத்தை உருவாக்கியவர் சங்கரரின் ஆசிரியரின் ஆசிரியர் கௌடபாதர். அவரது கொள்கைகளைப் பெரும்பாலும் தழுவியே சங்கரர் பாஷியம் எழுந்தது என்பர். ஏகான்மவாதம் பரமான்மா, ஜீவான்மா என இரண்டு இல்லை; பரமான்மா ஒன்றே உள்ளது. இந்த உலகம் உண்மையல்ல, ஒரு தோற்றம். எல்லாம் மாயை எனக்கூறுகின்றது. தமிழகத்தில் நிலவியிருந்த தெளிந்த சைவ சித்தாந்த நெறியை இவையாவும் குழப்பின,

### சாங்கியம் :

வே த, உபநிடதங்களைப் பிரமாணங்களாக ஏற்றுக்கொள்ளும் மதங்களுள் காலத்தால் பழமையானது சாங்கியம். இ த னை முதலில் முறைப்படுத்தி வெளியிட்டவர் கபிலர் என்பவர். சாங்கிய நூல் க ளு ள் கி. பி. 5 ஆம் நூற்றாண்டில் ஈஸ்வரகிருஷ்ணர் என்பவரால் எழுதப்பட்ட சாங்கிய காரிகை என்பதே தொன்மையான சாங்கிய நூல். சாங்கியம் மாற்றம், நிலை பேறு இரண்டும் உண்மை என ஏற்கிறது. எனினும், எது மா ற் ற ம் அடைகிறதோ அது அறிவுள்ள பொருள் ஆகாது எது அறிவே சொரூபமான பொருளோ அது மாற்றம் அடையாது என்று கூறுகின்றது. சாங்கியம் என்றால் தத்துவங்களைச் சங்கியை செய்து கூறுவது என்பது பொருள்.

### யோகம் :

யோ க மதம் சாங்கியத்துடன் இணைத்தே பேசப்பட்டுவருவது. சாங்கிய யோகம் என அறிஞர்கள் இவற்றை இணைந்தே பே சுவ ர். இவை இரண்டுக்கும் குறிக்கோள் ஒன்றே. இம்மதத்தை முதன் முதல் வரையறுத்து விளக்கியவர் பதஞ்சலி என்பவர், இவர் இயற்றிய யோகசூத்திரம் என்ற நூலே 'யோகம்' பற்றிய தொன்னூலாகும் இந்நூலுக்கு கி. பி. 4 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வியாசர் என்பார் சிறந்த வியாக்கியானம் ஒன்றை எழுதியுள்ளார். யோகம் கடவுளை உடன்படுசிறது ஆயின் பிற மதத்தார் தரும் சிறப்பை இம்மதம் கடவுளுக்குத் தரவில்லை. சாங்கியம் ஞானத்தை வற்புறுத்த. யோகம் தியானத்தை வற்புறுத்துகின்றது. யோகத்திற்கு இயமம், நியமம், ஆசனம், பிரணாயாமம், பிராத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய எட்டு அங்கங்கள் கண்டு சித்தசுத்தி ஏ ற் ப ட் டு, நான் என்ற நினைவு அறவே ஒழிதலே யோகமாகும்.

### பாஞ்சராத்திரம் :

இது தத்துவமுறையில் இல்லாது புராண முறையில் கூறப்படுவது. விஷ்ணுமூர்த்தியை முழுமுதலாகக் கொண்டதால் இது வைஷ்னவம் எனவும் வழங்கப் பெறும். இதுவே, விசிட்டாத்து விதம் எனவும் கூறப்படுகிறது. இராமானுசர் பிரமசூத்திரத்திற்கு எழுதிய விரிவுரை ஸ்ரீ பாஷ்யம் என வழங்குகின்றது இதுவே இராமனுசவேதாந்தம் எனப்படும் வைணவம். இரானுஜர் தத்துவத் திரயம் பேசுகின்றவர். அசித்து, சித்து, ஈசுவரன் ஆ கி ய முப்பொருளும் உண்மை; எனவே, இறைவனும், சீவனும் தனித்தனியானவை. இரண்டும் ஒன்றல்ல. இதனைப் பரபக்கம் ஏழு பாடல் களால் விரித்துரைத்து முப்பத்தொரு பாடல்களால் மறுத்துரைக்கிறது.

### அகப்புறச்சமயங்கள் :

பாசுபதம் என்பது நிமித்தகாரணவாதத்தில் நிலைப்பது முதலில் பரமாணு உபாதான காரணமாய் உலகத்தை உண்டாக்க ஆன்மாக்கள் மும்மலத்தில் க ட் டு ண் டு. ஆகமத்தின்படி

சிவபூசையால் கன்மம் நீங்கிப் பதியோடு ஒப்பது மோட்சம் என்று பாசுபதம் கூறுகின்றது. மாவிரதம் என்பது வேதாகமங்களைப் பிரமாணமாகக் கொள்ளினும், அவற்றைச் சிறப்பாகக் கொள்ளாது பொதுவாக ஏற்பது. இவற்றுக்கு வேறாகப் பாசுபதம் போன்ற நூல்களையே சிறப்பாக ஏற்பது. காளாமுகம் என்பது மாவிரதத்துடன் ஒத்தது. இது பெத்தம் முத்தி இரண்டையும் ஒன்றாகவே கொள்வது. சிறிது ஆகமபேதம் உண்டு. சிவன் படிக நிறமும், புத்திரதீபமணியும் தரித்த மூர்த்தியாய் அருள் செய்வன் என்பது. வாமம் என்பது சத்தியே முழுமுதல் எனப் பரத்துவம் கூறி எழுந்தது. சிற்சக்தி தம் அம்சத்தால் பராசக்தி முதலிய ஐந்து சக்திகளைப் படைக்க, அச்சக்திகள் பிரமன் முதலான ஆன்மாக்களைப் படைப்பர் என்பது வாமமதத்தார் கொள்கை. வாலை, திரிபுரை, சிவை முதலிய தேவியரைச் சக்கரத்தில் தாபித்து. தேவியின் மூல மந்திரம் செபித்து, அனைத்தையும் தேவி சொருபமாகக் கொண்டு மகிழ்வதே முத்தி என்பது இவர்கள் கொள்கை. வைரவம், சிவமூர்த்தி தமருகம் தரித்த மூர்த்தியாய் அருள்செய்வர் எனக்கூறுவது. வைரவர்களுக்குச் சைவசமயக் கொள்கைகள் அனைத்தும் உடன்பாடே, ஆறாவதாகிய ஐக்கியவாத சைவம். சைவ சித்தாந்தத்தைப் போலவே, வேதசிவாகமங்களைச் சிறப்புப் பிரமாணங்களாகக் கொள்கிறது. ஆயினும் சைவ சித்தாந்தத்தில் மிகமுக்கியமானதாகக் கருதப்படும் ஆணவ மல உண்மையை ஐக்கியவாத சைவம் உடன்படுவதில்லை. சிவனே பதி, மாயை, கன்மம் எனப்பாசம் இரண்டு, இருவினைக்குத்தக்கப்படி கன்மத்தை அனுபவிக்கும் போது, இருவினை ஒப்பும். அதன் வழி சத்தி நிபாதமும் எய்தும், அந்நிலையில் சிவன் ஆசாரியனாய் எழுந்தருளி உபதேசித்து ஆன்மாவைத் தன்னிடத்தே ஒடுக்குவன் என்பன ஐக்கியவாதசைவக் கொள்கைகள்.

## அகச்சமயங்கள் :

முதற்குறித்த அறுவகை அகச்சமயங்களும், சைவசித்தாந்தம் பேசும் பதி, பசு, ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை என்ற ஆறு பொருட் கூறுகளையும் உடன்படுவன. வேற்றுமைகள் பெரும்பாலும் முத்தி நிலை பற்றியதேயாகும். பாடாணவாத சைவம் முத்தி நிலையில் ஆன்மா இன்பத்துன்பம் இரண்டுமின்றிக் கல்லைப் போலக் கிடைக்கும் என்று கூறுகின்றது. சைவசித்தாந்தத்தின் முத்தி இன்பமும் அறிவும் பரிபூரணமான நிலையாகக் கூறப்படுகிறது. பேதவாதசைவம் முத்தியில் இறைவனுக்கும் ஆன்மாக்களுக்குமுள்ள பேதத்தை வற்புறுத்துகின்றது. இது வற்புறுத்தும் அளவு பேதத்தைச் சைவசித்தாந்தம் உடன்படவில்லை. சிவசமவாதம், கன்மா, முத்தியில் சிவனுக்குச்சமமான நிலையைப் பெற்றுப் படைத்தல் முதலிய முத்தொழில்களை இயற்றும் எனகிறது. சை. சித்தாந்தம் முத்தி நிலையிலும் ஆன்மா இறைவனுக்குச் சமமாவதில்லை இறைவனுக்குரிய ஐந்தொழிலை ஆன்மா ஒருபோதும் இயற்ற முடியாது எனக்கூறுகிறது. சிவசங்கிராந்தவாதமும் முத்தி நிலையில் ஆன்மா இறைவனுடைய இயல்புகள் அனைத்தையும் அடைகின்றன என்றே கூறுகிறது. இதனையும் சைவசித்தாந்தம் ஏற்பதில்லை. ஈசுர அவிகாரவாதசைவர்கள் முத்தி நிலை குறித்துக் காட்டும் உவமைகள் பொருந்தாதன எனச் சைவசித்தாந்தம் மறுக்கிறது. சிவாத்துவித சைவத்திற்கு நிமித்த காரண பரிணாம வாதம் என்ற பெயரும் உண்டு. நிமித்த காரணமாகிய சிவனே உலகாகப் பரிண மிக்கின்றான் என்று இம்மதம் பேசுகின்றது இதனையும் சைவசித்தாந்தம் மறுக்கிறது. அகச் சமயங்கள் ஆறின் கொள்கைகளை விரிவாக எடுத்துரைத்து உமாபதி சிவாசாரியார் தமது சங்கற்ப நிராகரணத்தில் வைசசித்தாந்த நெறி நின்று மறுத்துள்ளார்.

## முடிவுரை :

இவ்வகையில் அகப்புறச்சமங்கள் பற்றிய ஒரு சுருக்கமான அறிமுகமாகவே இக்கட்டுரை அமைகிறது. இச்சமயங்களின் விரிந்த கொள்கைகளையும் அவற்றின் பொருந்தாமையை சைவ சித்தாந்தம் மறுத்துரைக்கும் விதத்தையும், கட்டுரையில் சுட்டிக்காட்டிய நூல்கள் வழி, மேலும் அறிய ஆர்வத்தைத் தூண்டும் நோக்கிலேயே இக்கட்டுரை எழுந்தது.



உ

கொப்புடையம்மன்

# கண் கண்ட தெய்வம்

திரு- ச. தண்டாயுதபாணி
பி. காம், BA. CE. I. AMCT.
சிறப்பு உதவியாளர். யு. கோ. வங்கி
காரைக்குடி.

*பொன்னே வருக; அமரர் தொழும் பூவே வருக; பூ ஈன்ற*
*அன்னே வருக; அறம் வளர்த்த அணங்கே வருக; அருள் அளிக்க*
*இன்னே வருக; இமயமலை ஈன்றால் வருக; எழில்காரை*
*மன்னே வருக, கொப்புடைய மாதா வருக. வருகவே.*

ஓம் சக்தியாய், ஆதிபராசக்தியாய் அருள்மிகு அன்னை கொப்புடையநாயகி குடி கொண்டிருக்கும் காரை மாநகர் பக்தர்களின் வேண்டுதலுக்கு இணங்கி அவர்களின் குறையைப் போக்கும் சிறப்பு மிகு தெய்வமாக திகழ்ந்து வருகிருள்.

எத்தனையோ நெஞ்சங்களிலும் இதயத்திலும் அம்பாள் குடி கொண்டுள்ளாள். நேரும் துன்பங்கள் பலவற்றையும், பலரின் வேண்டுகோளையும் உடன் முடித்து வேண்டும் வரம் தரும், கண்கண்ட தெய்வமாக திகழ்ந்து வருகிருள். அவளின் அருகில் சென்று நெஞ்சுருக வேண்டி அவளின் உண்டியலில் ரூபாய் ஒன்றேகால் போட்டு உங்களின் வேண்டுதல் கூறினுல் 55 நாட்களுக்கு நிறைவேற்றி வைப்பாள். இது என் வாழ்க்கையில் பலமுறை பல அன்பர்களின் மூலம் கேள்விப்பட்டுள்ளேன்.

தூங்கும் பொழுது அவளை மனமார நினைத்து வேண்டினுல் அவள் உறுதியுடன் உங்கள் கனவில் தோன்றி குறைகளைக் கேட்பாள். அவளின் சக்தியால் தான் நான் காரை நகரில் இயங்கி வருகிறேன். வாழ்க்கையிலும் உயர்ந்துள்ளேன். வாழ்க்கையில் முன்னேறியவர்களின் கணக்கை அளவிட்டு என்னுல் கூறமுடியாது. பிராத்தனை என்பது நமக்கும் அவளுக்கும் உள்ளத் தெய்வீகத் தொடர்பைத்தவிர வேறு எதுவுமில்லை. மனிதனின் நன்மை தீமைக்குமிடையே உள்ள போராட்டம். பிராத்தனை மூலம் விடுதலைப் பெறப்படுகிறது. பிராத்தனை செய்யும் மனிதன் என்று அமைதியாக வாழ்வான்.

அன்பு பாசம், பிறருக்கு தொண்டு செய்வதின் மூலம் அவளின் அருளை நாம் நிச்சயமாகப் பெறமுடியும். அது கண் கண்ட உண்மை. எனது இனிய நண்பர் திரு, L. P. பெத்தபெருமாள். (ஷண்முக நாதபுரம்) அன்னையின் அருளால் பேராபத்திலிருந்து உயிர் பெற்று இன்று நலமுடன் உள்ளார். இது அரிய காட்சியும் கூட.

நாம் அவளின் அருளால் இயங்கி வருகிரேம். இயக்கப்படுகிரேம். உயர்ந்து நிற்கிரேம். அந்த வழிகாட்டி கண்கண்ட தெய்வம். அருள் மிகு கொப்புடையநாயகியை என்றும் நினைவில் வைத்து வணங்கி வருவோமாக.

# அம்பிகை அழகு தரிசனம்

அமரர். கவியரசு கண்ணதாசன்

**கூந்தல்**

கார்கால மேகங்கள் கூத்தாடும் வானத்தில்
கல்யாணப் பெண்ணானவள்
கள்ளூறும் பூச்சூடி உள்ளூர உள்ளூரக்
கலைபொங்கும் சிலையானவள்
சீராரும் பூந்தென்றல் மெதுவாகத் தாலாட்ட
தேன்கூந்தல் தான்கொண்டவள்
சில்லென்ற பாலூற்றித் தினந்தோறும் நீராடித்
திருவீதி வருகின்றவள்
ஓர்காலில் இசையோடு ஓர்காலில் தாளங்கள்
ஒன்றாகக் கூடிவருமோ
ஓசையுடன் ஈசனோடு பேசுகிற உமையாளின்
ஒருபார்வை நகையாகுமே!

**வகிடு**

நெற்றிக்கு மேலாகக் கற்புக்கு கோடாக
நேராக இட்டவகிடு
நீயன்றி வேறொன்று நெஞ்சத்தில் இலையென்று
சிவனுக்கு நிகழ்த்தும் அழகு
கொற்றக் குடைதாங்கும் மன்னர்க்கும் அரசிக்கும்
கொள்கைகள் கூறும் வகிடு
கொடைதந்த திருமாலும் துணைவந்த பிரம்மாவும்
கும்பிட்டு நிற்கும் அழகு
பற்றற்றமுனிவோர்கள் பாதைக்கு உறவாகிப்
பகல்நேர விளக்காகுமே
பரமன்தன் மணவாட்டி உயிர்க்கால்கள் நல்லொன்றும்
பலகால நகையாகுமே!

## செவிகள்

இடப்பக்கம் வலப்பக்கம் இருகேள்விக்குறியாக
இயக்கத்தில் நிற்கும் செவிகள்
இசைக்கின்ற அடியார்கள் உரைக்கின்ற மொழியாவும்
எடுத்தோதும் இன்ப மணிகள்
விடப்பட்ட மாதர்கள் விம்மல் குரல்கேட்டு
விரைந்தோடச் செய்யும் அலைகள்
விளங்காத பேர்சொல்லும் தவருன வார்த்தைக்கு
வினையின்றி மூடும் வழிகள்
கடப்பாட்டு மெய்த்தேவி கல்யாணி மகராணி
காதோலை விளக்காகுமே
கற்ருேரும் மற்ருேரும் கண்டாலும் சென்ருலும்
கண்முன்பு நகையாகுமே!

## நெற்றி

ஆரும் பிறைபோன்ற அழகான நுதல்மீது
ஆனந்த முத்துக்களும்
அடிவானில் வருகின்ற சிவப்பான மேகங்கள்
அளிக்கின்ற சிற்பங்களும்
மாருத திலகத்தில் மகராணி வரைகின்ற
மகத்தான பாடல்களும்
மழைக்காலம் வெயிற்காலம் அனைத்துக்கும் சுகமான
மலர்கொண்ட மஞ்சங்களும்
பாராத கண்ணென்ன கண்ணுக்கும் உமையாளின்
பால்மேனி கவியாகுமே
பாவையவள் மேனிதனில் சந்தனமும் குங்குமமும்
பவளம்போல் நகையாகுமே!

## புருவம்

கார்வண்ணன் கைவில்லும் கண்ணனவன் போர்வில்லும்
கனிவான புருவங்களோ
கண்ணுன தங்கைக்கு அண்ணன்மார் தருகின்ற
கல்யாண வரிசைகளோ
நீர்வற்றிப் போனுலும் பூவற்றிப் போகாத
நிலையான சின்னங்களோ

நெடுவானம் புவிமண்ணைத் தொடுகின்ற காட்சி
நிழல்காட்டும் பாவங்களோ
போர்வில்லை முகங்கொண்ட பொன்னாரும் திருமேனி
பொய்யாத வடிவாகுமே!
பொழுதுபடத் தேவியினைத் தொழுதுவரும் பூவையரின்
பூஜையொரு நகையாகுமே!

## கண்கள்

கானுளக் கொடியாளக் கருநீல மலராளக்
கலைமான்கள் தாமும் ஆளக்
கணையாள வினையாள காமந்தன் செயலாளர்
கற்பூர தீபம் ஆள
மீனுள மின்னுள விளையாடும் தமிழாள
விழிக்கோணம் உருவானதோ
மேலாக்கு நீலத்தைப் பூவாக்கிக் கண்ணுக்குள்
மெய்கீர்த்தி வளர்கின்றதோ
வானுள மண்ணுள வடிவான பொன்மேனி
வார்க்காத சிலையாகுமே
வட்டமிடும் முத்துவிழி நட்டநிசி வேளையிலும்
வளமான கலையாகுமே!

## நாசி

வடிவான முப்புரமும் பொடியாகப் போனதொரு
மணவாளன் புன்னகையிலே
மணவாளன் நெஞ்சமெல்லாம் பொடியாகிப் போலதொரு
மகராணி தன்னகையிலே
தொடுகின்ற இதழ்மீது உறவாடும் நாசிக்குள்
சுகமான தென்றல் வருமே
தொடர்பான மணவாளன் இல்லாத நேரத்தில்
சுடுகின்ற தீயும் வருமே
படம் போடமுடியாத அழகான சிறுநாசி
பட்டுப்போல் மெதுவாகுமே
பருவமுள மங்கையரில் திருவிளக்கு பாவைக்குப்
பலகோடி நகையாகுமே!

## கன்னம்

அன்னத்தை மகதேவன் அணைக்கின்ற நேரத்தில்
ஆனந்தக் கடலானது
அடையாளக் குறிபோட இதுபோன்ற திரைச்சீலை
அவருக்கே உரித்தானது
கன்னத்தைப் பாலென்று கவிபாடிப் பலனென்ன
காணாத கண்காட்சியே
கணையாழி வைரத்தைப் பொடியாக்கி நீருக்கிக்
கரைக்கின்ற பெருமாட்டியே!
சொன்னத்தை வைரத்தைச் சொன்னாலும் (பொருளில்லை)
தொலையாத எழிலாகுமே
தூயவளின் மணிமகுடம் பாலவடியும் கன்னத்தில்
சூட்டுவது நகையாகுமே!

## இதழ்

ஆற்றோரக் கொடியொன்றில் காற்றாடக் காற்றாட
அழகான கோவைப்பழம்
ஆலோலப் பண்கேட்டும் போகாத கிளிகொத்த
அசைந்தாடும் வண்ணப்பழம்
ஊற்றாக நீருண்ணும் மகதேவன் வரும்போது
உறவாடும் செம்மாம்பழம்
உதிரத்தின் நிறமென்ன நிறமென்று கேட்பார்க்கு
இதழ்காட்டும் உண்மைப் படம்
ஆற்றாத பேருக்கு நல்லன்பு சொல்கின்ற
அருள்பொங்கும் மாணிக்கமே!
அழகுமுக மீதிலொரு இதழ்சிந்தும் நகைதானே
அகிலத்து நகையாகுமே!

## நாக்கு

உண்டென்றும் இலையென்றும் ஒருகேள்வி புவியுண்டு
உன்நாவை யார் பார்த்தது
ஒருமாடு சுடுகாடு திருநீறு தான்கொண்ட
உன்நாதன் தான்பார்த்தது
வண்டாடும் கொடிமீதில் இலைபோன்ற நாவென்று
வரையோர்கள் தான்சொன்னது

வலுவாக ஓமென்று நீசொல்லும் நேரத்தில்
வருவார்கள் நாம்பார்ப்பது
கொண்டாடும் நெருப்பாகி மகிஷாசுரன் தன்னைக்
கொலைசெய்த மறுகாலமே
கொடியதொரு வடிவாகித் திருநாவை வெளிக்காட்டும்
கோலம் ஒரு நகையாகுமே!

## பற்கள்

முத்தென்றும் கீற்றென்றும் முல்லைப் படைஎன்றும்
மோகத்தில் சிலர்சொல்லுவார்
முக்குத்தி வடிவாக வாய்க்குள்ளே விளக்கேற்றும்
முன்பல்லை யார்காணுவார்
தத்தித் தவழ்கின்ற விண்மீனைச் சாருக்கிச்
சரமாக அதைச் சூட்டுவார்
தலையாய சிவனுக்குச் சுகமான பல்லென்று
தமிழானக் கவிகாட்டுவார்
கத்துங் கடல்தந்த சீரான முத்தங்கள்
கனிவான பல்லாகுமே
கற்பகம் அவள்வடிவில் அற்புத விளக்கமிடும்
கலைஎயிறும் நகையாகுமே!

## தாடை

செவ்வாழைப் பூப்போன்ற முன்வாயின் கீழாகச்
செய்வித்த சூலாயுதம்
சிவனும் சிலநேரம் சுகமாக விளையாடச்
செய்கின்ற ஓராயுதம்
கொவ்வைப்பொன் இதழுக்கு முத்துக்கொடுக்கின்ற
குளிர்தாடை ஓரற்புதம்
கோடானு கோடிப்பெண் கூட்டத்தில் வைத்தாலும்
குறிப்பாகக் காட்டும்திறம்
எவ்வாறு நான்சொல்ல நேராகப் பார்ப்போர்க்கு
இளந்தாடை கலையாகுமே!
இசைபாடும் வேகத்தில் அசைகின்ற நேரத்தில்
எல்லாமும் நகையாகுமே!

## கழுத்து

பாரதப் போர்தன்னில் அண்ணன் திருக்கண்ணன்
ஒளித்ததோர் பாஞ்சசன்யம்
பக்தர்கள் கயிலாய மலையிலே தினந்தோறும்
படைக்கின்ற பொங்கல் வண்ணம்
நாரதப் பாவாணன் இசைக்கின்ற யாழுக்கு
நரம்புகள் தந்ததாலே
நாள்தோறும் வீணைபோல் ஒலிக்கும் கழுத்துக்கு
நலமான ஈடுயாரே

பாரதி மாதவிப் பூங்கொடி பைரவி
பார்வையும் உலகாளுமே
பலநகைகள் விளையாடும் அழகுமயில் மேனிய
பதமான நகையாகுமே!

## கழுத்துக் கோடுகள்

கல்யாணச் சீர்களில் ஏதோ குறைவந்து
கழுத்திலே மூன்றுகோடு
கண்மூன்று கொண்டவன் நெற்றிக்குத் தோதாக
காலமே இட்ட ஏடு
பல்கால வாழ்க்கைக்கு திருமணப் பெண்கொள்ளும்
பணிவான மூன்றுமுடிகள்
பாவையர்கள் யாருக்கும் கற்பென்றும் அறமென்றும்
பணிஎன்றும் மூன்று வழிகள்
செல்வாக்கு எங்குமே சொல்வாக்கு வெல்லுமே
செயங்கொள்ளும் வழியாகுமே
தேவியவள் திருமேனிக் கோவிலில் ஒவ்வொன்றும்
திருமிக்க நகையாகுமே!

## தோள்கள்

ஏழேழு பூமியும் ஏற்றிச் சுமக்கின்ற
ஈடற்ற பச்சை வேய்கள்
ஏழ்கடல் நாதனும் அடியவர் கோடியும்
இன்மாலை சூட்டும் தோள்கள்
வாழ்வாங்கு வாழ்கின்ற மங்கையர் துன்பத்தை
வாங்கியே வைக்கும் நிலைகள்

வஞ்சத் தரக்கரின் நெஞ்சத்திலே வீழ்ந்து
வடிக்கின்ற தூய மலைகள்
வீழ்வார்க்குப் புண்ணியம் விடுவார்க்குப் பாவமாய்
விளைகின்ற தளமாகுமே
வேதநெறி ஓதுசிவ நாதனது தேவிஇயள்
திருமேனியே நகையாகுமே!

### கரங்கள்

வாழைக்த மென்மையும் முல்லைக்கு வாசமும்
வளமாகத் தந்த கரங்கள்
வானத்தைப் பூமியை தானத்தை தருமத்தை
வலுவோடு காக்கும் திறங்கள்
ஏழைக்கும் செல்வர்க்கும் ஒன்றேஎண் சக்திஎன்(று)
எப்போதும் நிற்கும் அணிகள்
ஈசனின் தோள்மீது பாசத்திலே சேர்ந்து
எழிலாடும் வண்ண மணிகள்
ஊழுக்கும் ஊழான மாணிக்க வல்லியின்
ஒளிக்கைகள் மலராகுமே
உடல்முழுதும் பாவிவரும் அழகுமணிப் பிரகாரம்
ஒவ்வொன்றும் நகையாகுமே!

### நகைகள்

சிங்கார மாலையுடன் நவரத்ன கண்டியும்
சீர்மணிப் பொற்கோலமும்
திருவுடைய அட்டிகை எழிற்காக மாலையும்
செம்மணிப் பூவாரமும்
மங்காத வைரமும் மாணிக்க மாலையும்
மார்புக்கு நடுவிலோட
மாதுசிவ காமிஉமை நாயகியின் வண்ணமே
மழைமின்னல் போலமாற
சங்கீதப் பண்களும் சிவனோடு சரஸமும்
தழுவிடும் கலையாகுமே
தள்ளாடும் நகையோடு தங்கமயில் மேனியும்
தரமான நகை யாகுமே!

**நகில்கள்**

சங்கிணை அறுத்திரண்டு பாதியை எடுத்தவளின்
தன்மான வைத்த நிலையோ
தாமரையின் பூமொட்டுப் பொய்கையினைத் தான்விட்டு
தாய்வீடு வந்த கலையோ
மங்கல நகைகளொடு குங்கும நதிக்கடலில்
மல்லாந்து நிற்கும் மலையோ
மாடுடைய பரமனிடம் தோடுடைய தேவியவள்
மயக்கத்தில் வீசும் வலையோ
அங்கமதை மூடியுள ஆடையையும் நாள்மீறும்
ஆனந்த ஒளிகாட்டுமே
அளவுடைய திருமார்பும் அன்னமவள் பொன்னுடலும்
ஆயிரம் நகை யாகுமே!



உ

# அன்னை வழிபாடு – கொப்புடையம்மன்

(டாக்டர் வெ. சு. அழகப்பன், எம். ஓ. எல். எம்லிட்., பி. எச். டி., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி)

**முன்னுரை :** "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற மொழியை அறியாதவர் இலர். பெண்டிர் அன்பும் அருளும் நிறைந்தவர்கள். அருளால் உலகம் தழைக்கிறது. சீவன்- உடல்- சக்தி இவை சேர்ந்திருக்கும் போதுதான் செயல்கள் நிகழும். ஆகவே பரமனை வழிபடுவதுபோல் "சக்தியையும்" வழிபடத்தலைப்பட்டனர், நம் முன்னோர். சைவ சமயம்- சக்தியை, இச்சாசக்தி- கிரியாசக்தி- ஞானசக்தி என வகைப்படுத்திக் காட்டியது.

தொல்காப்பியர், வெற்றிக் கடவுளான கொற்றவையைக் குறிக்கிறார். சங்க இலக்கியங்களில்- திருமுருகாற்றுப்படை. கலித்தொகை, அகநானூறு. ஆகியவை உவமையைப்பற்றிப்பேசும். "கண்ணுதலோன் பாகத்து மங்கை உருவாய் மறையேத்தவே நின்றாய்" எனச் சிலப்பதிகார்ம், கொற்றவையின் புகழ்பாடுகிறது. ஆகவே பெண் தெய்வ வழிபாடு பழமையானதென்பதாம்.

சைவ சமயத்தின் உட்சமயங்களில் "சாக்தேயம்" ஒன்று. அது தேவி வழிபாடே. "இருக்கு" வேதத்தில், இலக்குமி, துர்க்கை பற்றிய செய்திகள் வருகின்றன. "கேனோபநிடதத்தில்" சக்தியே படைக்கும் கடவுள் என்று பேசப்படும். இன்றும், செயலான்மை இல்லாதவதனைச் "சத்துக்கெட்டவன்" என உலகம் பழிபேசும். செயலாற்றலுக்குப் பெண்துணைதேவை. மென்மையானவற்றையும் நன்மையானவற்றையும் நாம் பெண்ணாகவே உருவகம் செய்துவைத்துள்ளோம். வெற்றி, கல்வி, செல்வம், நிலம், பொன், பசு இவை அனைத்தையும் பெண்மையாகவே காண்கிறோம்.

இன்றும் கிராம மக்கள் அச்சம் தருபவைகளைப்பெண் தெய்வமாகக்கருதி வழிபடுகிறார்கள். மழை - "மாரி"யெனப்படும். மழை எடுக்கவும் கெடுக்கவும் வல்லது. ஆகவே அது வணங்கத்தக்க தென்பதால்மழையை "மாரியாத்தா" என்று பெண் தெய்வமாகக்கண்டு வழிபடத் தலைப்பட்டனர். அம்மை-வெப்பத்தால் வந்து மக்களை அழித்தபோது, அச்சப்பட்டு அதனை "முத்தாலம்மன்" எனக் கொண்டு வழிபட்டனர். எல்லையைக்காக்கும் தெய்வம் "எல்லையம்மன்" மந்தையைக்காக்கும் அம்மன் "மந்தையம்மன்" காட்டெல்லையில் இருப்பது "காட்டேறி". பீடத்தில் இருந்த தெய்வம் "பீடமேறி-பிடாரி ஆகியது. செல்வத்தைத் தருபவள் செல்லாயி-அல்லது பொன்னுத்தாள் - பொன்னியம்மன் இப்படியே திரௌபதை - பத்திரகாளி என்ற தெய்வங்களைக் கிராம மக்கள் கொண்டாடினர். இவையெல்லாம் அச்சத்தாலும் பெறவேண்டிய பொருளின் ஆசையாலும் மக்கள் பெயர் வைத்துப் பெண் தெய்வங்க்ளாக வணங்கினர். பெண்டிர், கருணை நிறைந்தவரல்லரோ?

கோப்பாக மக்களைப் பாதுகாத்தவள், கோப்புடையாள். அதுவே சொல்லமாட்டாதவர் களால், கொப்புடையாள் என்றாயிற்று. கோப்பு என்றால், சேகரமாகக் காப்பவள் என்பது பொருள். கொப்பு என்ற அணியை அணிந்த தெய்வம் என்பதால் "கொப்புடையாள்" என்று கூறுவர்.

கணக்கு முதலியனவற்றை அரசர் ஒப்புச் செய்ததால் முற்காலத்தில் இத்தெய்வம் ''ஒப்புடையாள்'' என வழங்கிப் பின்னர் கொப்புடையாள் ஆகியதாகவும் கூறுவர்.

**காலம் :** கல்லுக்கட்டிப் பகுதி முழுதும் ஒருகாலத்தில் சுற்றி பிராமண வீடுகள் நிறைந்திருந்ததாம். கடைகள் வரும் முன்னர் அவர்கள் இக்கோவிலுக்கும் கிருட்டிணன் கோவிலுக்கும் பூசை வைத்தவர்கள். இப்பகுதி வளர்ச்சியடையும் முன்னர் தேவகோட்டை சமீன்தார்கள். சிவகங்கைச் சமீன்தார்கள் இடம் ''கவுல்'' வாங்கிவைத்திருந்தனர். முன்னர் சிவகங்கைச் சமீன்களிடம் இக்கோவில் ஆட்சியில் இருந்தது. அச்சமீன் தோன்றிய காலம் 17ஆம் நூற்றுண்டின் நடுப்பகுதி. தேவகோட்டைச் சமீன் 200 ஆண்டுகட்கு முன்னர் தோன்றியது. அவர்கள் இக்கோவிலுக்காக இடம் ஒதுக்கிச் சிறப்பளித்தனர். இன்றும் அச்சமீன்தார்களின் மண்டகப்படி முதல்நாள் உண்டு. ஆகவே இக்கோவில் இன்றுள்ள அமைப்பில் ஓரளவு பெரிய நிலையில் வந்தது 200 ஆண்டுகட்கு முன்னர் என அறிதல் வேண்டும்.. இத்தெய்வங்குறித்து இன்று கிராமக் கதைகள் வழங்குகின்றன.

**கதைகள் :-**

அ) காட்டம்மனும் கொப்புடையாளும் அக்கா தங்கை. காட்டம்மன் தன் ஏழு மக்களையும் தங்கையான கொப்புடையாள் சந்திப்பதை விரும்பாமல் கூடையில் அடைத்தாள். அது தெரிந்த தங்கை மனம் வருந்திக் கல்லாக ஆகுமாறு சபித்தாள். பின்னர் சினங்கொண்டு தனியாக காரைக்குடிக்கு வந்து கோயில் கொண்டாள் என்று ஒரு கதை.

ஆ) இனி, காரைக்குடிக்கு அடுத்துள்ள பள்ளத்தூர், பில்லமங்கலம், கோனுபட்டு, இங்குள்ள கிராமப் பெண் தெய்வங்களும் காட்டம்மன் - கொப்புடையாளின் உடன் பிறப்புக்களே எனக்கூறுவர். இது கிராம தேவதைகளை ஒன்றாகக் கருதி வழிபட வழிசெய்யும் ஒருமைப்பாட்டுணர்ச்சியால் எழுந்த கதை.

இ) கல்லலுக் கடுத்த சிவரக்கோட்டையில் இருந்து ஒரு அம்மன் சிலை பழைய செஞ்சையிக்கு கொண்டுவரப்பெற்றது. அது ஏதோ ஒருகாரணத்தால் ஒரு மரத்தடியில் புதைக்கப் பெற்றது. மாடு மேய்க்கும் சிறுவர்கள் இதனைக்கண்டெடுத்தனர். அந்தப்பகுதி முன்னர் சங்கராபுரம் எனப்பெற்றது. பின்னர் அங்கிருந்து ஊர் விரிவடைந்தபோது இப்பொழுதுள்ள பகுதிக்கு கொண்டுவரப்பெற்றது என்பர். இது வரலாற்று செய்தியை உள்ளடக்கியது; புனைவும் இருக்கிறது.

இத்தெய்வம் காட்டம்மனோடு தொடர்புபடுவதேன் என்றால் காட்டம்மன் கோவிலில் இருந்த உற்சவ மூர்த்தியே இங்கு தெய்வமாக வைக்கப்பெற்றது என்பதாகும். இன்று கோவிலில் பீடம் மட்டுமே உண்டு; மூலவிக்கிரகம் இன்றும் இல்லை. இது கிராம தேவதை. கிழக்கு நோக்கி இருப்பது ஒரு சிறப்பு. பொதுவாகக் கிராம தேவதை காளி வடக்கு நோக்கியே இருக்கும். இங்கு கிழக்கே இருப்பதற்குக் காரணம், முன்னரே இங்கு கருப்பர் சந்நதி வடக்கு நோக்கி இருந்திருக்கலாம். ஆகவே கிழக்கு நோக்கி வைத்திருப்பர்.

**கல்லுக்கட்டி காரணம்?**

இச்சிலையை வைத்துப் புதிதாகப் பூசிக்கப்பெற்ற காலத்தில், இடைக்குலப் பெண் ஒருத்தி இத்தெய்வத்தைக் கொண்டாடி மோர் வணிகம் சிறப்பாக நடந்தால், ஒரு தொகை ஒதுக்கி வைப்பதாய் வேண்டுதல் செய்துகொண்டாள்; வியாபாரம் சிறப்பாக நடந்தது. செல்வம்

பெருகியது. அந்தத் தொகையை வைத்து ஒரு குளம் கோவிலின் வடபுரம் அமைத்துச் செம்பு ராங்கல்லால் கட்டி வைத்தாள். இவ்விடைக்குலப்பெண் ''கல்லுக்கட்டி'' இடையர் வகுப்பின ளாவாள். அதாவது அந்த வகுப்பார் தாலிக்குப் ஒருவகைக்கல்லை அழகாய்த் தேய்த்து அதனையே தாலியாகக் கட்டிக்கொள்ளுவர். ஆகவே அவர்களை கல்லுக்கட்டியார் என்பர். அந்தப் பெண் செய்து வைத்த திருப்பணியாதலால் இக்குளம் ''கல்லுக்கட்டிக் குளம்'' எனப் பெயர் சூட்டப் பெற்றது. பின்னர் அதைச் சுற்றி வந்த கடைகள் ''மார்க்கெட்'' எல்லாம் ''கல்லுக்கட்டி'' என அழைக்கப்பெற்றன.

## மக்கள் ஈடுபாடு

சங்கராபுரத்து வல்லம்பர்கள்-கண்டனூரைச் சார்ந்த பாலையப்பட்டி வல்லம்பர்கள் ஆகிய பெருமக்கள் இத்தெய்வத்தோடு நெருங்கிய தொடர்புடையவர்களாகத் தெரிகிறது. என்ன தொடர்பு என்ற வரலாறு அறியப்பெறுதல் வேண்டும். மற்றும் வியாபாரிகள் பலரும் பேட்டையார் மண்டகப்படியைச் சிறப்பாகச் செய்கிறார்கள். தச்சர், கொத்தனார்கள் ஆகிய தொழிலாளிகள் மண்டகப்படி சிறப்பாக செய்கிறார்கள்.

கிராம தேவதையாக இருந்த ஒருதெய்வம், ஐயர்களால் பூசை செய்யப்பெறுவது வியப்புக்குறியதாக உள்ளது. இங்கு ''காரண ஆகமப்படி'' பூசை நிகழ்கிறது. ஐயர்களும் வேதம் முழங்க பூசை செய்கிறார்கள்.

## நகரத்தார் பணி

நகரத்தாரில் தேவகோட்டை சமீன்தார்கள், ஊரின் நடுவில் கோவில் எடுக்க இடம் விட்டுக் கொடுத்திருக்கிறார்கள்; முதல் மண்டகப்படியைச் செய்து வருகிறார்கள். இக்கோவிலின் அலங்கார முன் மண்டபத்தைக் காரைக்குடி அள. அழ. குடும்பத்தார் கட்டிவைத்தனர். 1960ல் குடமுழுக்கு நிகழ்ந்தபோது, பல நகரத்தார்கள் முன்னுன்று நடத்தி வைத்ததோடு பெரும் பொருள் நன்கொடை நல்கினர்.

இன்றும் செவ்வாய்த் திருவிழாவில் 1, 2, 3. 7, 8 ஆம் திருவிழாவை நகரத்தார்கள் ஏற்று நடத்துகிறார்கள். இத்திருவிழா (செவ்வாய்) காலத்தில் நகரத்தார் வேற்றூர் செல்ல மாட்டார்கள். புதுமணமக்கள் கட்டாயம் இத்திருவிழாவிற்கு அழைக்கப்பெறுவர்.

இத்தெய்வத்தை நகரத்தார் புலவர்களாகிய சொக்கலிங்க ஐயா அவர்கள், சேவு. மெய்யப்ப செட்டியாரவர்கள், அரு. ராம. அருணாசலம் செட்டியார், அழ. சித. சொ. தெய்வராயன் செட்டியார், டாக்டர். ரெ. முத்துக்கணேசன், நா. அண்ணாமலை செட்டியார், தமிழ்க் கடல், ராய. சொ. அவர்கள் ஆகிய பெருமக்கள் பாடல்கள் பாடித் தொழுதேத்தியிருக்கிறார்கள்.

## முடிவுரை

என் மேற்பார்வையில் இரா. உமையாள் என்ற பெண் அழகப்பா பல்கலைக் கழகத்தே இக்கோவிலைப்பற்றி ஆய்வு செய்து எம்பில் பட்டம் பெற்றிருக்கிறார்.

இங்கு, செவ்வாய்த்திருவிழா, வருடப்பிறப்பு, பூச்சொரியல் ஆகிய விழாக்கள் தெய்வ மனங்கமழ நடப்பதோடு அரிய இசை விருந்துகளும் படைக்கப்பெறுகிறது. கலைநிகழ்ச்சிகளும் நடைபெறும்.

''ஆடுங்கொப்பணி அழகு தலைத்திடும்'' வைரக்கொப்பாத்தாள் வரந்தரும் கண்கண்ட தெய்வமாவாள். இணையடி தொழுதார் எல்லா நலமும் பெறுதல் உறுதி.



# "குலம்காக்கும் தேவி கொப்புடையாள்!"

கவிஞர். சிவல்புரி சிங்காரம் (கண்ணதாச தாசன்) கீழச்சிவல்பட்டி – 623 205

எப்பொழுது அழைத்தாலும் உடனே வந்து
இரவுபகல் பாராமல் அருள்கொ டுப்பாள்!
அற்புதங்கள் பலநடத்திக் காட்டு கின்ற
அழகான காரைநகர் குடியி ருப்பாள்!
செப்புமொழி எம்மொழியாய் இருந்த போதும்
சேவித்தால் அவர்களுக்குச் செல்வம் சேர்ப்பாள்!
கொப்புடையாள் எனும்பெயரைப் பெற்ற அந்தக்
குலம்காக்கும் தேவியினைப் போற்று வோமே!

மாலையில்லாக் கன்னியர்க்குச் சீக்கி ரத்தில்
மணவாளன் மாலையிட அனும திப்பாள்!
வேலையில்லாக் காளையர்க்கு வேலை தந்தே
வியக்கும்விதம் பொருள்சேர வழிவ குப்பாள்!
சோலையிலே பூக்கின்ற மலரெ டுத்துத்
தோகைக்கு அணிவித்து, தீபம் காட்டிக்
காலையிலும் மாலையிலும் தொழுத வர்க்கே
கனவெல்லாம் நனவாகும் உண்மை யன்றோ?

சிக்கல்களை வாழ்வினிலே சந்தித் தோர்க்கும்,
செந்தமிழை நாள்தோறும் சிந்தித் தோர்க்கும்,
பக்கபல மாயிருக்கும் அன்னை யென்றால்
பாரதத்தில் கொப்புடையாள் ஒருத்தி தானே!
எக்கலைகள் கற்றவரும், அவளை நாளும்
இதயத்தில் குடிவைத்தால் அவர்க ளுக்கே
தக்கவிதம் பலன்கொடுப்பாள்! குறுக்கே நிற்கும்
தடைகளையும் முறியடிப்பாள்! வெற்றி சேர்ப்பாள்!

செல்வத்தைக் குவிப்பதற்கு விரும்பு வோரும்,
செல்வாக்கை வளர்ப்பதற்கு விரும்பு வோரும்,
வல்லவராய் ஆவதற்கு விரும்பு வோரும்,
வருங்காலம் நலமடைய விரும்பு வோரும்,
கொள்கருத்தைப் பரப்புதற்கு விரும்பு வோரும்,
குலம்காக்கும் கொப்புடையாள் சந்நி திக்கே
வெள்ளியன்று வந்துவிட்டால் பலன்கி டைக்கும்!
வியக்கும்விதம் வாழ்வமையும் உண்மை யன்றோ?

# அம்மன் அருள்

'நற்கதை நம்பி' பேராசிரியர் **அய்க்கண்**
*தலைவர், அனைத்து இந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், பசும்பொன் மாவட்டக் கிளை*

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு அப்போது தான் வெங்கடாசலமும், இந்திராவும் சென்னையிலிருந்து கோட்டையூர்க் கிராமத்துக்கு வந்திருந்தார்கள். கல்லூரித் தேர்வுகள் முடித்து விட்டதால், ஒரே மகன் ரவியும் அவர்களோடு வந்திருந்தான்.

கிராமத்துக்கு வந்ததும், வயலைச் சுற்றிப் பார்க்கப் போன வெங்கிடாசலம், வரப்பிலே தடுக்கி விழுந்து வலது காலிலே இரத்தக்காயம் அடைந்தார். வலது கை மணிக்கட்டும் அசைக்க முடியாதபடி சுளுக்கிக் கொண்டு விட்டது.

பல நாட்களுக்குப் பிறகு ஊர் வந்திருக்கும் அவர்களைச் சந்திக்கவும், அடிபட்ட வெங்கடாசலத்திடம் நலம் விசாரிக்கவும் ஊர் மக்களும் உறவினர்களும் தினசரி வந்து கொண்டிருந்தார்கள்.

அன்று காரைக்குடி கொப்புடையம்மன், கோயில் பூச்சொரியல் விழா கோட்டையூரிலிருந்து நிறையப் பேர் மாட்டு வண்டிகளிலும், சைக்கிள்களிலும், பஸ்களிலும், காரைக்குடிக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். ரவியும், தன் உள்ளூர் நண்பர்களுடன் கிளம்பினான்.

'' அம்மா! நான் காரைக்குடிக் கோயிலுக்குப் போயிட்டுவர்றேம்மா ! ... ஃப்ரண்ட்ஸெல்லாம் சைக்கிளிலே போறாங்க நானும் போயிட்டுவர்றேன் ... ''

'' சரி, ஜாக்கிரதையாகப் போயிட்டு வா. காரும் பஸ்ஸூம் வண்டியுமாய் ரொம்பக் கூட்டமாயிருக்கும் ... பார்த்துப் போகணும் '' என்ற எச்சரிக்கையுடன் மகனை அனுப்பி வைத்தாள் இந்திரா.

'' பார்த்தீங்களா, கிராமத்துக்கு வந்ததும், நம்ம பிள்ளைக்குப் பக்தி வந்திடுச்சு '' என்று மகிழ்வு பொங்க, கணவனிடம் கூறினாள் அவள்.

'' உன் பிள்ளைக்குப் பக்தி வந்திடுச்சின்னு அர்த்தமில்லை. இந்த ஊரிலே இங்கிலீஸ் படம் காட்டுற தியேட்டர் இல்லே. அதனால் தான் பொழுது போக்குறதுக்குன்னு கோயிலுக்குக் கிளம்பியிருக்கான்! '' என்று கேலியாகச் சிரித்தார். வெங்கிடாசலம்.

'' அப்படி நினைக்காதீங்க ! நாஸ்திகர்களுக்குக் கூட சில ஸ்தலங்களிலே திடீர்னு பக்தி உணர்வு ஏற்படறதுண்டு.

'' பக்தி என்கிறது, இன்ஸ்டிங்க்ட் இல்லே! அது ஒரு 'வே ஆஃப் லைஃப் '' என்ற வெங்கிடாசலம் வாசலில் யாரோ வரும் சப்தம் கேட்டதும், திரும்பினார்.

'' என்ன வேனா ! நீங்க காரைக்குடிக்குப் புறப்படலியா?

'' வாங்க கானாரூனா ! உட்காருங்க. நீங்க புறப்பட்டாச்சு? என்று கேட்டார் வெங்கடாசலம்.

'' ஆமா... பஸ்ஸ்டாண்டில் சூனா பானா எனக்காகக் காத்துக்கிட்டிருப்பார். நீங்களும் தம்பதி சமேதராய்ப் போய் அம்மனைத் தரிசிச்சிட்டு வாங்க... ''

'' இல்லைங்க ... இந்த சுளுக்கின கையாலே கார் ஓட்டவும் முடியாது. காயம் பட்ட காலோட எப்படி கோயிலுக்குப் போய்வர்றது? '' என்று தயங்கினார் வெங்கிடாசலம்.

'' அதனால் என்னங்க, இந்திராதான் கார் ஓட்டுமே? ரெண்டு பேருமாய் காரிலே போயிட்டு வாங்க. கொப்புடையாளுக்கு இந்த வருஷம் வைரக்கிரீடம் ஜொலிக்குது. அம்மனைப் பார்க்கக் கொடுத்து வச்சிருக்கணும் பட்டணத்திலிருந்து இவ்வளவு தூரம் வந்திட்டு அம்மனைத் தரிச்சிக்காம வீட்டிலே இருக்கிறதாவது? புறப்படுங்க... புறப்படுங்க...'' என்று தூண்டி விட்டு வெளியே போனர் கானாருனா.

'' ஆமர்ங்க... அவங்க சொல்றது சரிதான். நாமும் காரைக்குடிக்குப் போயிட்டு வருவோம்'' என்றாள் இந்திரா.

'' ஓ. கே... புறப்படு...'' என்று மெதுவாக எழுந்தார் வெங்கடாசலம்.

உள்ளே டிரஸ் செய்து கொள்ளச் சென்ற இந்திரா, வேலைக்காரி காத்தாயியைக் கூப்பிட்டாள்.

'' காத்தாயி! நானும் ஐயாவும் காரைக்குடி பூச்சொரியல் பார்க்கப் போறோம். பூக்காரன் இன்னும் வரலியா? ''... என்று கேட்டாள்.

'' இல்லேம்மா! நம்ம ஊர்ப்பூ எல்லாம் இன்னிக்கு காரைக்குடிக்குக் கொண்டு போயிடுவாங்க.''

'' அப்படியா ?- இப்போ தலையிலே வச்சுக்கப் பூ இல்லையே ?- சரி நான் காரைக்குடி போய் வாங்கி வச்சுகிக்கிடறேன்.''

எஜமானி சொன்னது சரியாகப் படவில்லை விசுவாசமுள்ள வேலைக்காரிக்கு.

'' என்னம்மா இது, வீட்டிலிருந்து புறப்படப்போ பூ இல்லாமப் போவல்லாமுங்களா?'' என்று மெல்ல முணு முணுத்தாள்.

'' பரவாயில்லை- நான் என்ன சின்னப் பெண்ணா? '' என்று சிரித்தாள் இந்திரா. அந்தச் சிரிப்பிலே இன்னும் இளமை பொங்கி மலர்வதை ரசித்தாள் காந்தாயி.

'' என்னம்மா, இப்படிச் சொல்லுறீக? உங்களைப் பார்த்தா, கொள்ளத் தக்கனே பையனையும், பொண்ணையும், பெத்த பொம்பிளைன்னு சொல்ல முடியுமா? கட்டுவிடாம, நறுக்குனு புதுப்பொண்ணாட்டம் இருக்கீக! ... ஒங்களைப் பார்த்து, என் கண்ணே பட்டுடும் போலிருக்கு!'' என்று இரு கைவிரல்களையும் முஷ்டியாக மடக்கி, தலையின் இரு பக்கமும் வைத்து நெறித்துச் சொடுக்கி திருஷ்டி கழித்தாள் காத்தாயி!

நிலைக் கண்ணாடியில் ஓரக் கண்ணால் தன் 'சிக்' கான உடற்கட்டைப் பார்த்துக் கொண்டாள் இந்திரா. புதிதாகப் பார்ப்பவர்கள், அவளை ஒரு கல்லூரி மாணவனின் தாயாக நினைக்கவே முடியாது.

'' இருங்கம்மா- நம்ம தோட்டத்திலே ஏதாவது பூ இருந்தா பறிச்சுக் கொண்டாறேன். அதைக் கட்டி வச்சிக்கிட்டு புறப்படலாம்'' என்று பின் பக்கம் ஓடினாள் காத்தாயி.

காரைக்குடியில் நெரிசலான கூட்டம். கோயிலைச் சுற்றி நான்கு கல்லுக் கட்டித் தெருக்களிலும் 'ஜே ஜே' என்று மக்கள் நடமாடிக் கொண்டிருந்தார்கள். ஆங்காங்கே இளைஞர்கள் கண்ணுக்கு விருந்தளிக்கும், 'வண்ணங்களைப்' பார்த்து ரசித்துக் கொண்டிருந்தார்கள். அந்த ரசிகர்களின் சொர்க்கத்தில், ரவியும் தன் தோழர்கள் புடை சூழ வலம் வந்து கொண்டிருந்தான்,

அழகான பெண்களைப் பார்த்ததும், 'இது எப்படி இருக்கு?' என்று ரஜினி ஸ்டைலில் பக்கத்திலிருப்பவர்களிடம் அபிப்பிராயம் கேட்பான், ஒரு பதினாறு வயதுப் பிஞ்சு!

'' இந்தக் கிளியோபாராவின் மூக்கு மட்டும் கொஞ்சம் வளையாம இருந்தா, உலக சரித்திரமே மாறிப் போயிருக்கும்! '' என்பான் சரித்திர நோட்ஸைக் கரைத்துக் குடித்து வாந்தி எடுத்த ஒரு மாணவ நண்பன்.

'' அன்னக்கிளி! உன்னைத்தேடுதே! '' என்று மெதுவாக ஆலாபனம் செய்வான் இனனொரு சங்கீதப் பிரியன்.

'' அடடா மாமரக்கிளியே! '' என்ரு விசில் வழியாகப் பாடலை நினைவு படுத்துவான் இன்னொரு 'மைனர்' .

' ஈவ் - டீஸிங்' கலையின் புதிய முறைகளையெல்லாம், பட்டணத்து 'டெக்னிக்' குகளையெல்லாம், உள்ளூர் ' ஆதாம்'களுக்குக் கற்றுக் கொடுத்தான்ரவி. மெட்ராஸ் காலேஜ் ஸ்டூடெண்ட் என்ற கௌரவத்தால், அவன் தான் அன்று ஹீரோ. அவன் பின்னாலேயே அத்தியந்த சிஷ்யர்களாய் சுற்றி வந்தார்கள் உள்ளூர் இளவட்டங்கள்.

ரவி தலைமையிலிருந்த ரசிகர் கூட்டம், நான்கு கல்லுக்கட்டி வீதிகளிவும் உலா வந்து முடிந்து, கடைசியில் கோயிலுக்குள்ளே நுழைந்தது. அங்கே சந்நிதியிலும், பிரகாரங்களில் நல்ல நெருக்கடி, ... பக்தர்கள் தரிசனம் செய்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

பிரகாரத்தில் போதிய வெளிச்சம் இல்லை. தெற்குப் பிரகாரத்தின் ஒரு மூலையில், ரவி அன்ட்கோ நின்றவாறு ' அழகு சர்வே ' செய்து கொண்டிருந்தது, அவர்களைத் தாண்டிப் போய் விட்டபெண்கள் கோஷ்டி ஒன்றில் ஒருத்தியின் பின்னழகில் லயித்துவிட்டான் ஒருவன்.

'' டேய் ! அதோ போகுது பார், தலையிலே ரோஜாப்பூ வைச்சுக் கிட்டு ... ஒ! அருமையான பின்னழகுடா! அஜந்தா, எல்லோரா எல்லாம் இவள் பின்னழகுக்கு முன்னாலே தூசிடா! '' என்று விமர்சித்தான் அந்த '' கலா ரசிகன். ''

'' அவள் தலையிலிருக்கிற அந்த ரோஜாவை எடுக்க முடியுமா? '' - இன்னெருவனின் '' அட்வென்ச்சர் '' ஆசை !

'' நோ, ... முடியாது ! அவள் திரும்பிப் பார்த்துட்டாள்னா ஆபத்து. '' - மற்ருெருவன் பயந்து ஒதுங்கினுன்.

'' ஏன் ரவி, உன்னாலும்? '' - என்று 'ஹீரோ' வைப் பார்த்தான் ஒருவன்.

'' ஏன் ... இது என்ன பிரமாதம்? மெட்ராஸிலே சினிமா தியேட்டர் கூட்டத்திலே பெண்களுடைய ஹேர் - பின்னையே எடுத்திருக்கேன் நான்! '' என்று சிரித்த ரவி, '' இதோ பார், அந்த ரோஜாப்பூ வடக்குப் பிரகாரம் போறதுக்குள்ளே கொண்டுவந்திடறேன் பார்! '' என்று கூட்டத்திற்குள் குதித்தான். விர்ரென்று பாம்பு மாதிரி வளைந்து சென்று நெருங்கி, மேற்குப் பிரகாரத்தின் இருட்டிலே, அவளை நெருங்கி அந்தப் ரோஜாப்பூவை சாமர்த்தியமாகக் கைப்பற்றிக் கொண்டு வெற்றிப் பெருமிதத்துடன் திரும்பி வந்தான் அவன்.

எவரெஸ்டை எட்டிப்பிடித்த டென்சிங்குக்குக் கிடைத்ததைவிட அதிகமான பாராட்டுக்கள் ரவிக்குக் கிடைத்தன!

பூச்சொரிதல் விழா முடிந்து 'கலர்க'ளெல்லாம் வீடுகளுக்குப் போனபிறகு, ரவி கோட்டையூருக்குத் திரும்பிவந்தான். வீட்டிலே கூட்டமாகப் பலர் கவலையோடு உட்கார்ந்திருந்தார்கள்.

செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டுநின்ருன் ரவி.

''அப்பாவும் அம்மாவும் காரைக்குடி போய்த் திரும்பியபோது, வேலங்குடிக் குறுக்குச் சாலையில் காரை வளைத்துத் திரும்பும்போது, அம்மா ஏதோ நினைவில், 'ராங்சைடிலே' வந்ததால் எதிரேவந்த லாரியில் மோதி, அப்பாவுக்கு நல்ல அடியாம். கோட்டையூர் ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்கிறார்களாம்''.

அலறியடித்துக் கொண்டு மருத்துவமனைக்கு ஓடினான் ரவி.

அங்கே, படுக்கையில் அப்பா கண்மூடி அசையாமல் கிடந்தார். தலையிலே பெரிய கட்டு. உடம்பிலும் மூன்று இடங்களில் மருந்து போட்டுப் பஞ்சு வைத்துக் கட்டியிருந்தார்கள்.

பக்கத்தில் கண்ணீர் வடித்தபடி உட்கார்ந்திருந்த இந்திரா, மகனைப் பார்த்ததும் 'ஓ'வென்று கதறிவிட்டாள்.

''அம்மா! அப்பாவுக்கு ஒன்றும்?''

''இல்லேடா... நல்லவேளை! ஒன்னும் ஆபத்தில்லே... லேசான காயங்கள்தான். வலி தெரியாமலிருக்க மருந்து கொடுத்துத் தூங்க வெச்சிருக்காங்க...''

''ஏம்மா, உன் ட்ரைவிங்தான் தப்பு என்கிறாங்களே, நீ மெட்ராசிலே ஹெவி ட்ராஃபிக்கிலேயே ஓட்டுவியே? இங்கே எப்படி ஒரு ஆக்ஸிடென்டிலே...?''

ரவிக்கு ஆச்சரியமாயிருந்தது. அவளுடைய டிரைவிங் அனுபவத்தில் இதுவரை ஒரு கோழிக் குஞ்சுகூட காரிலே சிக்கி சிவலோக பதவி அடைந்ததில்லே! அப்படி சர்வ ஜாக்கிரதையாக கவனமாகக் கார் ஓட்டுவாள் இந்திரா.

''என் தப்புத்தான் எல்லாம்! காரைக்குடி கோவிலுக்குப் போயிருந்தபோது அம்மனைக் கும்பிட்டு, அப்பா நடக்க முடியாதுங்கிறதினுலே சந்நிதியிலே அவறை நிற்கச் சொல்லிவிட்டு நான் மட்டும் பிரதட்சணம் சுற்றிவந்தேன் மேற்குப் பிரகாரத்திலே வர்றபோது, இருட்டிலே ஏதோ தலையிலே படறமாதிரியிருந்தது. கவனிக்காம சாதாரணமாய் வந்திட்டேன். கோயிலே விட்டு வர்றபோது, 'உன் தலையில் இருந்த ரோஜாப்பூ எங்கே'ன்னு கேட்டார். அப்பா. எனக்குத் தூக்கி வாரிப்போட்டுட்டது. கோவிலுக்கு வந்திட்டுப்போறபோது பூவைத் தொலைச்சிட்டது எனக்கு ஏதோ ஸென்டிமென்டலாய் மனசிலே பதிஞ்சு கஷ்டமாயிடுச்சு... திரும்பி காரிலே வர்றபோதும் இதே நினைப்புத்தான்...

அப்பாகூட 'ஏன் இபபடி எதையோ பறிகொடுத்த மாதிரி இருக்கே? பாதையைப் பார்த்து ஓட்டு'ன்னு சொல்லிக்கிட்டு வந்தார். ஒரு சுமங்கலி கோயில்லே பூவைப் பறிகொடுக்கிறது என்கிற விஷயம், என்னே ஸைக்காலஜிக்கலாய் பாதிச்சிடுச்சு... அதே நினைப்பிலே வந்ததினுல்தான் குறுக்குச் சாலையிலே ஆக்ஸி டென்ட் ஏற்பட்டுடுச்சு!''

திடுக்கிட்டு நின்ற ரவியின் உடலின் ரத்த நாளமெங்கும் ஜில்லிட்டுவிட்டது. மேற்குப் பிரகாரம்... தலையிலே ரோஜாப்பூ... ஆக்ஸிடெண்ட்...

''நல்ல வேளை ரவி! ஏதோ நீ என்றுமில்லாத அதிசயமாய், கோவிலுக்குப் போயிட்டு வந்தே பார்! அந்த புண்ணியத்திலேதான் உங்க அப்பா உயிர் பிழைச்சிருக்கார்'' என்று ஒரு பரவசத்தோடு வந்த தாயின் சொற்கள், அவனுடைய உள்ளத்தில் சாட்டையடியாய் விழுந்தன. பாண்ட் பைக்குள் இருந்த அந்த ரோஜாப் பூக்களின் இதழ்களெல்லாம் முள்ளாகி, அவன் நெஞ்சில் குத்திக் கிழித்தன.

'உலகத்தில் எல்லாம் பெண்களும் 'ஈவ்'களல்ல; அவர்களிலே அம்மாக்களும் உண்டு...'

அவனுடைய நெஞ்சின் வலி அழுத்தத்தில் கண்களிலே நீர் ஊற்றெடுத்தது...

அவன் செய்த குற்றத்துக்கு, அம்மன் ஏன் அப்பாவுக்குத் தண்டனை கொடுத்தாள்?

அவனுக்காக அம்மன் கடுந்தண்டனை கொடுத்திருந்தால்—

தன் செல்லமகனுக்கு ஏற்படும் எந்தத்துன்பமும் அன்புப் பெற்றோர்களுக்கும் ஆற்றொணாத் துன்பம்தானே?...

அருளே வடிவான அன்னை கொப்புடையாள், அந்த அரும்பின் குற்றத்தை மன்னித்து, குற்றத்தின் பரிமாணத்தை மட்டும் அவனுக்கு எடுத்துக் காட்டியிருக்கிருள்...

அம்மனின் அருள்வேள்ளத்திலே நனைந்ததுபோல், தெய்வக் குற்றத்தின் உணர்விலே அவன் உடலெங்கும் வியர்வை துளிர்த்தது...

அந்த வியர்வை நீர், அவனது உள்ளத்து அழுக்குகளையும் கழுவித் தூய்மைப் படுத்திவிடும்...

---

# அபிடேகப் பலன்கள்

| | | |
|---|---|---|
| *பஞ்சாமிர்தம்* | — | *வெற்றி* |
| *பால்* | — | *வாழ்நாள் பெருக்கம்* |
| *தயிர்* | — | *மக்கள் பேறு* |
| *நெய்* | — | *முத்தி* |
| *தேன்* | — | *இனிய குரல்வளம்* |
| *கரும்பின் சாறு* | — | *பிணி நீக்கம்* |
| *உரித்த வாழைப்பழம்* | — | *பயிர்வளம்* |
| *எண்ணெய்* | — | *நலங்கள்* |
| *இளநீர்* | — | *போகம்* |
| *கும்பம்* | — | *குற்றநீக்கம்* |

# "அன்னை அருளமுது"

(கவியரசர் கலைமாமணி டாக்டர் இளங்கம்பன் டி. லிட்., பழனி)

கொப்புடையம்மன் என்னும் பெயரால்
குவலயம் காத்திடுவாள்
ஒப்புயர்வற்ற சக்தியில் ஓங்கி
உலகை ஈர்த்திடுவாள்
எப்படையும் அவள் புகழேமேவ
எழிலைப் பெய்திடுவாள்
செப்பரும் கருணைக்குரியாள் அவளின்
சீரினையாருரைப்பார்?

ஆர்வரினும் அவள்அழகிய சன்னிதி
அன்புடன் அழைத்திடுமே
சீர்மிகுதாயவள் சிந்தனையுற்றால்
செல்வமெலாம் வருமே
பார்புகழ் கொப்புடைஅம்மன் தாளே
பணியும் நமக்கென்றும்,
பேர்புகழ் வாழ்வைப் பேரரசியவள்
பேரருள் சேர்த்திடுமே

மிகவும்உயர்ந்த தெய்வம் அவளை
மேதினி அறியாதோ
தகவார்வரங்கள் தாயவள் நல்க
தழைப்பதும் இப்புவியே
புகழுக்குரிய பூவரசி அவள்
பொன்னடி போற்றிடுவோம்
அகிலத்தொளியாம் அன்னை அவளின்
அருள் அமுதை உண்போம்



ஓம் சக்தி!

# தாயான சக்தி

(சக்தி காரைக்குடி பி. எல். ராமசாமி)

## சிவ சக்தி

ஓம் சக்தி!

உலகெலாம் உண்டானது எதுவாயினும் அதனை உருவாக்கியவர் ஒருவர் உண்டு! உண்டானவை 'பொருள்'-'செயல்' என இரண்டாய் உள்ளன! பொருள் என்பது 'ஜடம்' செயல் என்பது சலனம்' ஜடம் என்பது சிவன்! சலனம் என்பது 'சக்தி' எல்லாப் பொருளும் சிவசக்தி இணைப்பே!

பொருள் என்பது தோற்றம் - காணக்கூடியது. சக்தி என்பது உள்ளடக்கம்- காணஇயலாதது! சிவம் என்பது அசையாதபோது சவம்! அசையும்போது ஜீவன்! சிவன் தோற்றம்! சக்தி உள்ளடக்கம். சிவன் தவமிருந்தார் - உலக இயக்கம் நின்றது! சிவன் நடனமாடினார் - உலகம் இயங்கியது! நடனம் - சலனம்! சக்தியின் வெளிப்பாடு!

## எதற்கும் முதல்

சிவன் (பொருள்) இன்றியும் சக்தி இயங்கும் - காற்றைப்போல! பொருளையும் சக்தியே படைக்கும்! சக்தியே உலகமுதல்! சக்தியே எதற்கும் தாய்! சக்தியே கடவுள்!

கீதையிலே பரந்தாமன் பகருகிறார். '' யார் என்னை எந்த வடிவிலே வழிபடுகிறார்களோ அவர்களுக்கு அந்த வடிவிலே நான் காட்சியளிக்கிறேன் ''

சிவன், பிரம்மா, விஷ்ணு, அல்லா, கர்த்தர், அருகர், மாரி, காளி, நாகம், பசு, வேம்பு அரசு, என உயர்திணை. அஃறிணை எப்பிரிவில் பெயரில், உருவில் வணங்கினாலும் அதனைப் பெறுவது அவற்றின் உள்ளடக்கமான **சக்தியே !**

## தெய்வத்தாய்

சக்தியாம் தெய்வம் உணர்ந்து உள்ளம் உருகுவார்க்கு அருகில் வருவதாய், அருள் தருவதாய் ஆன இயல்புடையது! அருளைப்பெற தெய்வத்தை நண்பனாய்,, கணவனாய், தந்தை யாய், குழந்தையாய், குருவாய் எந்தவொரு உறவோடும் நெருங்கலாம். எல்லா உறவுக்கும் மேலானதாய் மிகநெருக்கத்தைத் தருவது தாய் உறவு!

தாயான சக்தி, நம்முடைய நாட்டை, மதத்தை, ஜாதியை, மொழியை செல்வவேறுபாட்டை கண்கொண்டு காண்பதில்லை! அவள் இதயத்தால் காண்பதெல்லாம் அன்பு அன்பு அன்பு!

குழந்தை அழுத ''அம்மா!......'' என்ற குரலுக்கு ஓடிவராத தாயும் உண்டோ? தாயான தெய்வத்தை நினைந்தழுதால் அக்கணமே வருவாள் - அருட்பால் தருவாள்.

## கொப்பாத்தா

'மாரியாத்தா' 'காளியாத்தா' என்று ஆத்தாளாய் தெய்வத்தை அழைக்கின்ற செட்டி நாட்டில் காரைக்குடியாம் நகரத்து நாயகி **கொப்பாத்தா!**

' கொப்பு ' எனும் சொல் **காதணி** கொண்டை, கொம்பு எனப் பொருள் விரிக்கும் ''தோடுடைய செவியன்'' என்றார் பிள்ளை மூதறிஞர்! தோட்டை நிலவாக்கிப் **பட்டரை**

நிலத்தில் நிலவவிட்டாள் நெற்றி நிலவழகி **அபிராமி!** "அம்மா"... என்ற நம் அழைப்பை தோட்டைப் பூண்ட காதால் கேட்டு, கூடிய கேட்டையும் நீக்கி, நாடிய வீட்டையும் அருள்வாள் கொப்புடையாள்! அதற்கு அடையாளங்கள் இவைதான்!......

நகரின் இதயத்தில் நங்கையின் அரண்மனை! அதனைச் சூழ்ந்து தொழிற்பேட்டைகள் அவள் பார்வைபடும் நேர் பாதையில் தங்கமும் வெள்ளியும் காசும் கொட்டிக்கிடக்கின்றன அரண்மனையைச் சுற்றி எங்கணும் நவதானிய நானாவிதப் பொருட்களின் குவியல்கள்! அங்காடிகளின் அணிவகுப்பு! மெய்ப்பொருள் வாங்கும் கூப்பிய கையரின் படைகடல்! ஆம்! இது தாயாட்சி நகரம்! மற்றுமோர் மதுரை!

**வழிபாட மந்திரம்**

"ஓம் சக்தியே கொப்புடையாய் சரணமம்மா
அம்மா தாயே அருள்புரிவாயே!

தூய இடம் — உடல் — மனதால் நாளும் சந்தி வேளையில் 108 முறை மனதால் ஓதுங்கள். கொப்புடையாள் காட்சியும் தந்து கேட்டதும் தருவாள்! இது சத்தியம்!

ஓம் சக்தி! ஓம் சக்தி! ஓம் சக்தி!

---

*பொன்னே! வருக அமரர் தொழும்*
*பூவே வருக பூ ஈன்ற*
*அன்னே! வருக அறம் வளர்த்த*
*அணங்கே! வருக அருள் அளிக்க*
*இன்னே! வருக இமயமலை*
*ஈன்றாள் வருக எழில்காரை*
*மன்னே! வருக கொப்புடைய*
*மாதா வருக வருகவே!*

— அரு. அ. அரு. ராம. அருணசலம் செட்டியார்

உ

# "பக்தி"

பொற்கிழிக்கவிஞர் டாக்டர் ச. சவகர்லால் எம். ஏ. பிடி., பிஎச். டி.,

பக்தியில்லா நெஞ்சத்தில் என்றும் பண்புப்
பயிர்விளைய மாட்டாது; பேய்க ளெல்லாம்
பக்தியில்லா நெஞ்சத்தைத் தேடிச் சென்று
பாங்காகக் குடியிருக்கும்; உலகை வெல்லும்
சக்திபடைத் திருந்தாலும் இறைவன் பக்தி
சிறிதளவு மில்லையெனில் அழிவே மிஞ்சும்
பக்தியினை உள்ளத்தில் பாய்ச்சு தற்கே
பரிவுடனே ஆலயங்கள் கண்டார் முன்னோர்.

நிமிர்ந்துநிற்கும் கோபுரத்தைப் பார்க்கும் போதே
நெஞ்சத்தில் பணிவுவர வேண்டும்; நாட்டில்
திமிரெடுத்துத் திரிகின்ற மனித ரெல்லாம்
சிறுசருகே கோபுரத்தின் முன்னால்; ஊரில்
நிமிர்ந்துநிற்கும் தகுதியிந்தக் கோயி லுக்குள்
நிலைத்திருக்கும் இறைவனுக்கு மட்டு மேதான்
திமிரைவிட்டுப் பணிந்திடுவீர்; என்று நாளும்
சொல்லிநிற்கும் ஆலயத்துக் கோபு ரங்கள்

கற்பூரம் இறைவன்முன் காட்டு கின்ருர்;
கைகூப்பிக் கண்மூடி வணங்கு கின்றோம்
கற்பூரம் எரிகிறது; உருவே இன்றிக்
காற்றோடு கரையுமது சொல்வ தென்ன!
"அற்பமன தெரித்துவிடு; தீய எண்ணம்
அழித்துவிடு; நெஞ்சத்தில் ஒளியை ஏற்று;
நிற்காதே நெடுமரமாய்ப் பிறருக் காக
நித்தநித்தம் கரைந்திடுவாய்!" என்று சொல்லும்.

தேங்காயை உடைக்கின்றார்; இரண்டா யாகிச்
சிரிப்பதனைப் பார்க்கின்றோம்; இறைவன் முன்னே
தேங்காய்தான் உடைந்துசொல்லும் செய்தி என்ன?
சிந்தித்தால் மனதிற்குத் தெளியைக் கூட்டும்

"பாங்காக வந்துநிற்கும் மனிதா; நெஞ்சைப்
பக்குவமாய் உடைத்துப்பார்; உன்றன் நெஞ்சம்
தீங்கில்லா வெண்மையென இருந்தால் நில்லு;
தீங்கிருந்தால் திரும்பிப்போ"! என்று சொல்லும்.

ஊரையேய்த்துப் பலநாட்கள் வாழக் கூடும்
உலகையேய்த்துச் சிலநாட்கள் திரியக் கூடும்
பேரைமாற்றிப் பிறப்பை மாற்றி நாட்டி லுள்ள
பெரியவரை ஏமாற்றி உயரக் கூடும்
யாரைமாற்றி எத்தனைநாள் வாழ்ந்திட் டாலும்
இப்புவியின் திசைகளெல்லாம் கண்ணாய்க் கொண்ட
பேரைமாற்ற முடியாது என்ற உண்மை
புரியாமல் ஆடுபவன் அழிந்தே போவான்.

---

## கொப்புடையாள் வழிபாடு

ஓங்கார வடிவத்து உள்ளிருந்து
உலகீன்ற உமையவள் ஆதிசக்தி
பாங்காக மறைநான்கும் பரிமளித்துப்
பல்லுயிர்கள் வாழப் பரிமரித்து
ஆங்காங்கே அறமுயர நெறிவளர
அருள் சுரந்து ரட்சிக்கும் கொப்புடையாளை
நீங்காது நெஞ்சகத்தே வணங்கிடுவார்
நிகரில்லாச் செல்வத்தைப் பெறுவர்தாமே!

— சொக்கலிங்க அய்யா

# காரைக்குடி இராஜ இராஜேஸ்வரி அருள்மிகு கொப்புடையநாயகி அம்மன் திருக்கோயில்

## ஸ்தல வரலாறு

செட்டிமார் நாட்டின் தலை நகரம்: செல்வம் கொழிக்கும் மாநகரம், சீர்மேவும் காரை நகரின் கண் சிறப்புடன் பார்போற்றப் பராமரித்துவரும் அருள்மிகு கொப்புடையம்பாளின் பூர்வீகம் கண்டறியாதது நதி மூலம் ரிஷிமூலம் ஆகப்பல மூலங்களின் வாக்கு மூலங்களைக் கொண்டே வரலாறு வகுத்து வருவது; அதைத் தொடர்ந்து நாம் செல்வதே நலம். சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன் இந்நகரின் தென்பகுதியில் சுமார் 2 கல் தொலைவில் இருந்து வரும் பழைய செஞ்சை சங்கராபுரம் என்னும் கிராமப் பகுதியில் இருந்து வரும் காட்டம்மன் கோயிலில் எழுந்தருள் விக்கிரமாக இருந்ததை இங்கு கொண்டு வந்து ஸ்தாபித்ததாகத் தெரிகிறது. அக் காலத்தில் ஆண்டு வந்த அரசன் அன்றாடமும் வழிபட்டு வந்த ஒவ்வொரு நாளும் தன் வழிபடு முறைகளையும் தான் செய்கின்ற வரவு செலவு மற்றும் அலுவலர் களையும் கொப்புடையாளிடம் ஒப்புவித்து வந்தானென்பது செவிவழிச் செய்தி. மேலும் மொகலாய மன்னர் காலத்தில் கடவுள் திருவுருவங்களை அழித்து வந்த படியால் பாதுகாப்புக்கருதித் துர்க்கையாம் தேவி கொப்புடையம்பாள் திருஉருவத்தை தான் தன் வழிபாடு முடித்ததும் பழைய முதிய பெரிய வேப்பமரத்தின் அடியிற் பெரும் பொந்தில் மறைத்து வைத்து விடுவதாம் இப்படியாக ஒப்படை செய்யப் பெற்றமையால் ஒப்புடையாள் என்ற பெயர் காலப்போக்கில் மருவிக் கொப்புடையாள் என வழங்கலாயிற்று என்றும், அம்பிகையின் காதில் கொப்பு எனும் காதணியை அணிந்திருந்த காரணமாகக் கொப்புடையாள் என்றும் கூறப்பட்டு வந்துள்ளதாகத் தெரிகிறது.

## இருப்பிடம்

பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் சிவகங்கையில் இருந்து 45 கி. மீ. தூரத்தில் வடகிழக்கில் காரைக்குடி உள்ளது நகர மத்தியில் கொப்புடையாள் கோயில் அமைந்துள்ளது. திருச்சி இராமேஸ்வரம் இரயில் பாதை உண்டு. காரைக்குடி இரயில் நிலையத்திலிருந்து 3 கி. மீ. தூரத்தில் கோயில் இருக்கிறது.

## அமைப்பு

இத்திருக்கோயில் ஊரின் நடுவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இத் திருக்கோயிலின் நுழைவு வாயிலில் 3 நிலைக்கோபுரம் விளங்குகிறது. அம்பாள் சன்னதிதான் இங்கு சிறப்பு, இந்த சன்னதி கிழக்கு நோக்கி உள்ளது. கோபுர

வாயிலில் நுழைந்ததும் சோபனா மண்டபத்தில் இடப்புறம் கருப்பர் சன்னதியும், விநாயகர் சன்னதியும் உள்ளன, வலப்புறம் தண்டாயுதபாணி சன்னதியுள்ளது. இரண்டாவது வாயிலைக் கடந்ததும் அர்த்தமண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்தின் நடுவில் கருவறை உள்ளது. கருவறையின் சுற்றுப் பிரகாரத்தில் பஞ்ச மூர்த்திகள் சன்னதிகள் உள்ளன. கோயிலின் ஸ்தல விருட்சம் வில்வமரமாகும்.

இது ஒரு பிராத்தனை ஸ்தலமாகும். பக்தர்கள் வேண்டுதலை வேண்டுதலுக்கு ஏற்ப அவர்களது குறைகளை நீக்கும் சிறப்புடையவள். இத்திருக்கோயில் மூல விக்ரகம் இல்லை. உற்சவ விக்ரகமே மூல விக்ரகமாக இருந்து பக்தர்களுக்கு அருள் பாலிப்பது இத்தலத்தின் சிறப்பு ஆகும்.

இத்திருக்கோயிலிலுள்ள அம்பாளுக்கு நான்கு கைகள் உண்டு. வலது கை அபயமளிக்கும் தோற்றத்துடன் காட்சி அளிக்கும் அம்பிகை வலது கைக்கு மேல் உள்ள கையில் சூலம் ஏந்தியும், இடது கையில் பாசக்கயிற்றுடனும், இடது கைக்குக் கீழுள்ள கையில் கபாலத்துடனும் காட்சியளிக்கின்றாள்.

## பூஜையும் திருவிழாக்களும்

இத்தலத்தில் உள்ள அம்பாளுக்கும் மற்றுமுள்ள பஞ்சமூர்த்திகளுக்கும் நாள்தோறும் காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தஜாமம் ஆகிய நான்கு காலங்களிலும் பூஜைகள் நடைபெறுகின்றன. இத்திருக்கோயிலில் கார்ண ஆகமப்படி பூஜை செய்யப்படுகிறது.

இத்தலத்தில் கீழ்க்கண்ட மாதங்களில் அதனதன் எதிரே குறிப்பிட்ட திருவிழாக்கள் விமரிசையாக இன்றும் நடைபெறுகின்றன.

| மாதம் | திருவிழா | நடைபெறும் நாட்கள் |
|---|---|---|
| 1) சித்திரை | வருடப்பிறப்பு | 1 |
| 2) சித்திரை | பூச்சொரிதல் | 1 |
| 3) சித்திரை கடைசிச் செவ்வாய் | காப்புக்கட்டுதல் | |
| 4) வைகாசி முதல்வாரம் | செவ்வாய்ப் பெருந்திருவிழா | 10 |
| 5) ஆடி முதல் செவ்வாய் | புஷ்பவியாபாரிகள் மண்டகப்படி | 1 |
| 6) புரட்டாசி | நவராத்திரி உற்சவம் | 10 |
| 7) மார்கழி | திருப்பள்ளி எழுச்சி | 30 |
| | நவசக்தி அர்ச்சனை | 1 |
| 8) தை கடைசி வெள்ளி | கோடி அர்ச்சனை ஞாபகார்த்த மண்டகப்படி | 1 |
| 9) பங்குனி | தாராபிசேகம் இந்துவர்த்தக சங்கத்தினர் | 1 |

## செவ்வாய்ப் பெருந்திருவிழா

இத்தலத்தில் நடைபெறும் திருவிழாக்களிலேயே மிகவும் சிறப்பாக நடைபெறும் திருவிழா சித்திரைச் செவ்வாய்ப் பெருந்திருவிழா ஆகும். இது ஒவ்வொரு ஆண்டும் சித்திரை கடைசிச் செவ்வாய்க்கிழமை தொடங்கி வைகாசி முதல் வாரம் முடிய 10 நாட்கள் மிகச்சிறப்பாக நடைபெறும். திருவிழா நிகழும் 10 நாட்களிலும் நாள்தோறும் இன்னிசை நிகழ்ச்சியும் நாதசுரக் கச்சேரியும் நடைபெறும். 10 நாட்கள் திருவிழாவில், 7ஆம் திருவிழா வெள்ளிக்குதிரை வாகனத்தில் அம்பாள் புறப்பாடும், 8ஆம் திருநாள் தேரும், 10ஆம் திருநாள் தெப்பமும் மிகச்சிறப்பாக நடைபெறும். மேற்படி நாட்களில் பல ஆயிரக்கணக்கான பக்தர்கள் பக்கத்து ஊர்களிலிருந்தும், தொலை தூரத்திலிருந்தும் வந்து அம்பாளைத் தரிசனம் செய்து அம்பாளின் அருளைப் பெறுகின்றனர். இத்திருவிழாவை முன்னிட்டுக் காப்புக்கட்டிய நாள் தொட்டு திருவிழா முடியும் வரை இவ்வூர் மக்கள் வெளியூர்ப் பயணம் வைத்துக் கொள்ளமாட்டார்கள்.

## பிரதான குறிப்புகள்

இரவுகளில் திருப்பதி பாணியில் இராஜகோபுரத்தில் 240 மின்சார சரவிளக்கு கள் திருக்கார்த்திகை விளக்குகள் போல் காட்சி தரும், தினசரி காலசந்தி காலை 7-30 மணி, உச்சிக்காலம் பகல் 12-00 மணி சாயரட்சை மாலை 5-30 மணி, அர்த்தஜாமம் இரவு 8-00 மணி. செவ்வாய், வெள்ளிகளில் உச்சிக்காலம் அர்த்தஜாமம் முறையே அரை மணி நேரம் ஒரு மணி நேரம் தாமதமாகும். சித்திரை முதல் தேதி வருடப்பிறப்பு, இந்து வர்த்தக சங்கத்தார்களால் வெள்ளிக்குதிரை வாகனத்தில் அம்பாள் புறப்பாடு, வைர நகைகள் அலங்காரம் தனிச்சிறப்பு அன்று இரவு முழுதும் இசை நிகழ்ச்சிகள், கலை நிகழ்ச்சிகள் பக்தர்கள் அலைமோதும் காட்சி சிறப்பு அம்சம். தினசரி 10 குழந்தைகளுக்கு ஒரு மணி நேரம் தேவாரம் கற்றுக் கொடுக்கப் படுகிறது. திங்கட்கிழமை தோறும் கூட்டு வார வழிபாடு நடைபெறுகிறது தினசரி தேசாந்திரிகளுக்கு, மூன்று தயிர்ச்சாதம் இனாமாக விநியோகிக்கப்படுகிறது. இத்திருக்கோயில் பிரசாதம், அப்பம், வடை, புட்டு. இத்திருக்கோயிலின் வடபுறம் கச்சேரித்திடலில் உற்சவங்களில் கலை நிகழ்ச்சி, இசை நிகழ்ச்சி நடைபெற நிலையான அலங்கார மேடை உள்ளது ஒவ்வொரு தமிழ் வருடம் சித்திரை மாதம் 15, 16, தேதிகளில் நகரில் 12 இடங்களில் இசைநிகழ்ச்சிகளுடன் இத்திருக்கோயிலில் பூச்சொரிதல் நடைபெறும்.

## சொத்துக்களும் வருமானமும் நிர்வாகமும்

இத்திருக்கோயிலுக்குக் கீழ்க்கண்ட விபரப்படிக்கான சொத்துக்கள் இருக்கின்றன.

| | | நஞ்சை | | புஞ்சை | |
|---|---|---|---|---|---|
| | | ஏ. | செ. | ஏ. | செ. |
| நிலங்கள் | | 17 | 10 | 6 | 49 |
| கட்டிடங்கள் | 110 | | | | |
| காலியிடங்கள் | 5 | | | | |

இதர வருமானங்களுடன் மேற்கண்ட சொத்துக்களில் இருந்து வரும் வருவாய் ஆண்டு ஒன்றுக்கு ரு 5 லட்சமாகும்.

இத்திருக்கோயில் தமிழக அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் ஆளுகைக்கு உட்பட்டது. இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை ஆணையர் மற்றும் செயலரும் அவருக்கு அடுத்த படியாக துணைத்தலைவராக ஆணையாளரும் துணை ஆணையாளரும் உதவி ஆணையாளரும் உள்ளனர். இத்திருக்கோயிலின் நிர்வாகத்தைக் கவனிக்க அரசு ஊழியர் ஒருவர் செயல் அலுவலராக இருக்கிறார். சென்னை உயர்நீதிமன்றம் ஏ எஸ். 116, மற்றும் 117/1956 ஸ்கீம்படி அறங்காவலர் குழு நியமனமாகிறது. தற்சமயம் நியமனம் நிலுவையில் இருப்பதால் இத்திருக் கோயிலுக்கு அரசால் நியமிக்கப்பட்ட தக்கார் ஒருவர் உள்ளார்.

ரு. 2000/- முதலீடு செய்தால் அம் முதலீட்டின் வட்டியைக் கொண்டு வருடத்தில் ஒரு நாள் பணம் செலுத்தும் பக்தர்களின் பெயர், நட்சத்திரத்திற்கு பரம்பரையாக பூஜை செய்து அருள் பிரசாதம் நேரிலோ அல்லது தபால் மூலமோ அனுப்பி வைக்கப்பெறும்.



# அட்ட பந்தனம்

திரு. கம்பன் அடிப்பொடி

திருக்கோயில்களின் கடவுண் மங்களம் (பிரதிஷ்டை) செய்யப்பெறும் கல்லால் ஆன தெய்வப்படிமங்கள் ஆடாமல் நிலைபெற, இருப்பிடம் (பீடம்) படிமத்தின் அடிப்பகுதி இரண்டையும் பொருத்திப் படியச்செய்யும் ஒரு கூட்டுக்கட்டுப் பொருளை அட்டபந்தனம் என்பர். இப்பொருள் ஓர் அருமையான படைப்பு. அற்புதமான கண்டுபிடிப்பு. எட்டுப் பண்டங்களின் கலவையானதாகும் இருப்பிடத்தையும், தெய்வப்படிமத்தையும் இணைத்துப் பிணைப்பதாலும் இது "**அட்டபந்தனம்**" எனப்பெயர் பெறுவதாயிற்று.

அட்டபந்தன மருந்தில் கலக்கும் பொருள்கள் :

1. கொம்பரக்கு 2. சுக்கான்தூள் 3 குங்கிலியம் 4. கற்காவி 5. செம்பஞ்சு 6. சாதிலிங்கம் 7. தேன்மெழுகு 8. எருமை வெண்ணெய் ஆகிய எட்டுமே.

இவற்றை எல்லாம் கலந்து செய்யும் முறை இருவகையாகும். ஒன்று இடிமுறை மற்றது காய்ச்சு முறை. காய்ச்சுமுறை மிக விரைவாக ஆகிவிடும். ஆனல் காய்ச்சு மருந்து சார்த்தியதை அகற்ற வேண்டிய நிலை ஏற்பட்டால் அகற்றல் கிட்டத்தட்ட இயலாது. வலிந்து செயற்படும் பொழுது சிலையுருவிற்குச் சேதம் விளையவும் கூடும். ஆனதால் மிகப்பெரும்பாலும் இடிமுறையை மேற்கொள்ளலே நன்று.

மேலே சொன்ன பண்டங்களை நன்கு சோதித்து வாங்க வேண்டும். பின்னர் தூசு துப்பட்டை முதலிய களைந்து தூய்மை செய்யவேண்டும். அதன் பின்னர் அளவுப்படி கலக்க வேண்டும் கலந்த பின் இடிக்க வேண்டும்.

**1. கொம்பரக்கு:** இது அவலரக்கு அல்ல. மரப்பட்டையுடன் ஒட்டிக் கொண்டிருக்கும் இது தான் தூய்மையானது இயற்கையானது. கலப்பற்றது. இதை வாங்கிப் பொடித்து மரப்பட்டை முதலியவற்றை நீக்கிச் சுத்தமாக்கி வைத்துக் கொள்ளவேண்டும்.

**2. சுக்கான் தூள் :** சுக்கானின் பலநிறமும் இருவகையும் உண்டு. வெள்ளை நிறம் நன்று. கபில நிறம் கொள்ளலாம். கருமை நிறம் கூடாது. இதைக் கொண்டு வந்ததும் முதலில் சிறிது சுக்கானைத் தூளாக்கி அடுப்பில் காயும் இரும்புச் சட்டியிலிட்டு வறுத்துப் பார்க்க வேண்டும். படபட என்று (உப்பைப் போல) வெடித் தால் அவ்வகைச் சுக்கான் கூடவே கூடாது. ரவை மணல் போல வெடிக்காமல் இருந்தால் அவ்வகைச் சுக்கான் உகந்தது.

**5 குங்கிலியம் :** துண்டுத்துகள். தூசி இல்லாமல் பொறுக்கி எடுத்துப் பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

**4. கற்காவி :** இஃது அழுக்குச்சிவப்பு நிறமாகக் கட்டியாய் இருக்கும். பூங்காவி என்பதல்ல இது. கடைகளில் காவித்தூள் என்று பலவகைக் கலப்படங்கள் உண்டு. அவற்றை வாங்கக் கூடாது. கட்டிகட்டியாய் இருக்கும். கற்காவியையே வாங்கி, மேலே படிந்துள்ள தூசிகளைப்புடைத்துப் போக்கிவிட்டு, இடித்துப் பொடியாக்கி வைத்துக் கொள்ளவேண்டும்.

**5. செம்பஞ்சு :** இஃது இயற்கையாகவே வாதாம் கொட்டை நிறமுடையது. பிகார்ப் பக்கத்திலிருந்து வருவது. "கோத்தி" என்று பெயர். இதுதான் உகந்தது. சிவப்புச்சாயம் ஏற்றி அடை அடையாய்த் தட்டி வைத்துக் கொண்டு அதுதான் செம்பஞ்சு என்று ஏமாற்றுவோரும் ஏமாறுவேறும் மிக அதிகம். "கோத்தி" பஞ்சு கதர்க்கடைகளில் சொல்லி வரவழைக்கச் செய்யலாம். இதையும் சருகு, சொத்தை காம்பு முதலிய இல்லாமல் பழுது நீக்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

**6. சாதிலிங்கம் :** இதில் பலவகை உண்டு. உலாந்தாவிலிருந்து வருவதுதான் தரத்தால் உயர்ந்தது. கலவைப்பண்டம் எட்டிலும் விலை மிக்கது. சாதிலிங்கமே அஷ்ட பந்தனத்தின் முக்கியமான பொருள் இது. விலை மிகுதியை எண்ணி அளவைக் குறைப்பதும், தரமற்ற மலிவுச் சரக்கை வாங்குவதும் இன்று மலிந்து காணப்படுகின்றன. அப்படிச் செய்வது முறை கேடாகும் இஃது இரும்பைப் போலக் கனமிக்க பண்டமாகும். இதைப் பொடி செய்தல் எளிது. இதையும் நன்கு பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

**7. தேன் மெழுகு** : இதில் இருவகை உண்டு. ஒன்று மஞ்சள் நிறமுள்ளது. அதை மஞ்சண மெழுகு என்பர். மற்றொன்று வெண்மை நிறமாக இருக்கும் மஞ்சன மெழுகில் தேன் கலந்திருக்கும், வெண்மெழுகில் தேன் இல்லை. இதுதான் உகந்தது. வெண்மெழுகு என்று சில இடங்களில் மெழுகு வர்த்திச்குழம்பை ஆறவைத்து ஏமாற்றுவார்கள். வாயில் சிறிதுகிள்ளிப் போட்டுச் சுவைத்துப் பார்த்தால் உண்மை புலப்பட்டுவிடும்

**8. எருமை வெண்ணெய் :** பசுவின் வெண்ணெயில் கொழுப்புச் சத்துக் குறைவு. ஆகவே அது கூடாது. எருமை வெண்ணெய் தான் உகந்தது. இதிலும் சிறிதும் நீர்ச்சத்தின்றி முழுதும் அகற்றப் படவேண்டும். நெருப்பு, வெயில், வேறுவகை வெம்மை பயன்படுத்தப்பட முடியாதவை. அவற்றால் வெண்ணெய் உருகிவிடும். ஆனதால் புதிய மண்பானையை எடுத்துப் பானைக்கு ஒரு வீசை வெண்ணெயைப் புறத்தில் கால் அங்குலக்கனமாக அப்பி வெம்மை தாக்காத குளிர்ந்த இருண்ட அறையில், இரண்டல்லது மூன்று நாட்கள் வாய் கீழாகப்

பானையைக் கவிழ்த்து வைத்திருக்கவேண்டும், பானை வெண்ணெயில் உள்ள நீர்ச்சத்து முழுவதையும் உறுஞ்சிக் கொள்ள வெண்ணெய் பக்குவமாய் ஆகி விடும். தேவைக்கேற்பப் பானைகளின் எண்ணிக்கையைக் கூட்டிக்கொள்ள வேண்டும்.

எல்லாப் பண்டங்களும் ஆயத்தமான பிறகு மர உரலில் இடிக்கவேண்டும். கல்லுரல் கூடாது. ஒவ்வோர் உருண்டைக்கும் குறிப்பிட்ட அளவாக ஏழு பண்டங்களையும் உரலில் இட்டுத் தேவைக்கு ஏற்ப வெண்ணெயைச் சிறிது சிறிதாகச் சேர்த்து ஒவ்வோர் உருண்டையும் சுமார் அரைமணி நேரம் இடித்துப் பின்னர் உரலிலிருந்து எடுத்து உருட்டித் தலையில் ஆணிக் கொண்டையால் ஒரு குத்துக் குத்தி வைத்துக் கொள்ளவேண்டும். முதல் இடி முடிந்ததும் ஒரு குத்து. இரண்டாம் முறை இடித்த பின் இரண்டு குத்து. இப்படி எட்டு முறை இடிக்க வேண்டும். ஓர் இடிக்கும் அடுத்த இடிக்கும் இடையில் குறைந்தது இரண்டு நாள் இடைவெளி இருக்க வேண்டும்.

இனி அளவைப் பார்ப்போம் ஒவ்வொர் உருண்டைக்கும்.

| | | | | |
|---|---|---|---|---|
| சுக்கான் தூள் | ... | ... | $25\frac{1}{2}$ | தோலா |
| குங்கிலியம் | ... | ... | 9 | ,, |
| கற்காவி | ... | ... | $7\frac{1}{2}$ | ,, |
| இலிங்கம் | ... | ... | $7\frac{1}{2}$ | ,, |
| அரக்கு | | ... | $3\frac{3}{4}$ | ,, |
| மெழுகு | ... | ... | $3\frac{3}{4}$ | ,, |
| செம்பஞ்சு | — | ... | 1 | ,, |
| எருமைவெண்ணெய்... | | ... | $7\frac{1}{2}$ | ,, |

(இஃது எட்டு இடிக்கும் சேர்த்துள்ள உத்தேச அளவு. சிறிது கூடவும் ஆகலாம்) இவற்றை எல்லாம் மர உரலில் ஒவ்வொரு சரக்காக இட்டு ஒன்றோடு ஒன்று கலந்து ஒன்று சேரும்படி இடிக்கவேண்டும். முதல் ஆறு பொருள்களும் செமண்டு, சுண்ணும்பு, மணல் போன்றவை ஏழாவதாக பஞ்சு கம்பி வலை போன்றது. வெண்ணெய் தான் இந்தக் காங்க்ரீட்டிற்கு நீர் போன்றது.

இந்த மருந்து கலந்து இடிப்பதில் பண்டத்தூய்மை, பண்டங்களின் சேர்மான அளவு, இடிக்கும் கால அளவு மூன்றும் மிக முக்கியம். அத்துடன் இடிக்கின்றவர்களின் உடல்தூய்மை, மனத்தூய்மை, முதலியன மிக மிக முக்கியம். இடிக்கும் பொழும் இடிக்கும் ஆட்கள் ஆலயத்திற்கு ஏற்ப, "சிவ சிவ" அல்லது "நாராயணு" அல்லது "வேல் வேல் முருகா" என்பன போன்ற இறைவன் திருப்பேர்களை உச்சரித்துக் கொண்டே இடிக்க வேண்டும். இப்படிச் செய்த அட்டபந்தன மருந்து சார்த்திக் குட நீராட்டுச் செய்த திருக்கோயில்களில் அம்மருந்து எவ்வித குறைபாடும் நேராது. மிக நீண்ட நாட்களாய் இலங்கி வருதலைக் கண் கூடாகக் காண முடிகிறது.

கொம்பரக்குச் சுக்கான்தூள், குங்கிலியம், கற்காவி
செம்பஞ்சு சாதிலிங்கம் தேன்மெழுகு தம்பழுது
நீக்கிஎருமை வெண்ணெய்க்கட்டி நன்கிடித்து
ஆக்கல் அட்டபந்தனம் ஆம்
சுக்கான்தூள், சர்க்கரை, தொல்பேயன் நற்கனியும்
ஒக்கக் கலந்தமைத்தல் உற்றதிரி பந்தனம் ஆகும்

## மகாபிஷேகம்

கும்பாபிஷேகம் ஆனவுடன் செய்யப்படுவது இறைவனைப் பிம்பத்திலிருந்து கும்பத்திலும் கும்பத்திலிருத்து பிம்பத்திலும் ஆவாகனம் செய்த முறையால் விளைந்த களைப்புத் தீர்வதாகப் பாவித்து, மிகுதியான அபிஷேகத் திரவியங்களால் அபிஷேகித்து, நன்குபக்குவமான நிவேதனங்களைச் செய்து உபசரிப்பது மகாஹவீர் நிவேதனம் என்பதும் ஆகும்.